

# TRICHY ROUND TABLE No.54
## *ALL INDIA STUDENTS PAINTING COMPETITION 1992 - 93*



| | | |
|---|---|---|
| 1. Sub | : | OPEN (You may choose your own subject) |
| 2. Age Group | : | A. From LKG to V std<br>B. From VI to VIII std<br>C. From IX std and above |
| 3. Medium | : | Water colour, Poster Colour or Crayons.<br>Pencil sketching and oil colours are not allowed. |
| 4. Entry Fee | : | Rs.10/- per entrant. Number of entries are unlimited. |
| 5. Size | : | Minimum 10" x 12" Maximum 20" x 16"<br>With in this you may choose any combination<br>(eg. 20"x12" or 18"x10" etc) |
| 6. Entries and Further Details | : | You may send them directly to the convenor or through the local Round Table. (See the details below) |

7. Calander :

| | |
|---|---|
| a. Last date for Receiving the entries | 20.2.93 |
| b. Judging | 10.3.93 |
| c. Announcing the results | 20.3.93 |
| d. Exhibition and prize distribution | Last week of May |

8. For Further Details

J. RAMANAN, B.Arch., M.T.P.,
Consulting Architect,
T.E.L.C. Building,
Melapudur High Road,
TRICHY - 620 001.
Phone : 40531 or the Local Round Table
(See the Local Phone Numbers given below)

**PRIZES** : There will be I, II, and III prizes and 6 certificate of merits in each age group.

**I Prize Rs.1,000/- II Prize Rs. 750/- III Prize Rs. 500/-**

Bangalore 364433 • Coimbatore 44170 • Conoor 23084 • Erode 70062 • Hosur 2705 • Madras 475671, 868950 • Madurai 46874 • Ooty 23821 • Pondicherry 29352 • Salem 62149 • Tirupathur 9 • Tirupur 23309 • Trichy 40531 • Vellore 20345.

# உங்கள் கண்மணியின் கனவை கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்ஷன் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ 14% டிவிடெண்ட்

~~5~~ 3 வருடத்திற்கொருமுறை போனஸ்




**யூனிட் டிரஸ்ட் ஆ:ப் இந்தியா**

22 மில்லியனிலும் அதிகம் யூனிட்தாரர்களின் சேவையில்.

எல்லா செக்யூரிட்டீஸ் இன்வெஸ்டுமெண்டுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவை ஆகும். முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774

Sista's.UTI.1968.92 TM E

# விட்டுக் கொடுக்காமல்
# ஒட்டிக் கொள்ளும்
# அற்புதமான பசை வெமிக்கால்



பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் பொம்மை வீடு கட்டிடுவீர். ஃபர்னிச்சர்கள் போட்டிடுவீர். . கைக்கடக்கமாய் மெத்தெனப் பஞ்சடைத்த மிருக பொம்மைகள், பயமுறுத்தும் முகமூடிகள், மரப் பாச்சிகள்.... மரம், காகிதம், கார்டுபோர்டு, துணிகள் இவற்றின் துணையுடனே...

உங்கள் கற்பனையே வேடிக்கைக்கு எல்லை! உங்கள் ஓய்வு வேளையை உல்லாசமாய்க் கழித்திடச் சிறந்த வழி.

**VAMICOL®**

ஆர்ட் அண்டு கிராஃப்ட் அட்ஹெஸிவ்




வேம் ஆர்கானிக்
கெமிக்கல்ஸ் லிமிடெட்
ஸ்கைலைன் ஹௌஸ், 85, நேரு பிளேஸ், புது தில்லி-110 019.

React/198/92 Tam





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## எல்லோரும் இன்புற்றிருக்க

ஒவ்வொரு ஆண்டிலும் டிசம்பர் மாதம் வந்து விட்டால் யாவரும் வாழ்த்துச் செய்திகளை கிருஸ்துமஸ், புத்தாண்டு, பொங்கல் ஆகிய நாட்களுக்கு தம் உறவினர்களுக்கும் நண் பர்களுக்கும் அனுப்புகிறார்கள். தபால் துறையினர் தம் வாயிலாக அனுப்பப்படும் இச்செய்திகளை உரியகாலத்தில் உரியவர்களிடம் சேர்ப்பிக்க அரும்பாடுபடுகிறார்கள். ஏனெனில் அவை இலட்சக்கணக்கில் வந்து குவிகின்றன.

எல்லா வாழ்த்துச் செய்திகளின் வாசகங்கள் 'இந்நன் னாளில் என் உளங்கனிந்த நல்வாழ்த்துக்கள்' என்றே இருக் கும். ஒரு சிலர் அமைதி நிலவட்டும் எனவும் குறிப்பிடுவர்.

இப்படி இன்பமும் அமைதியும் நிலவ வேண்டும் என ஏன் யாவரும் விரும்புகிறார்கள்? தான் அடையும் இன்பத்தை மற்ற வர்களுடன் பகிர்ந்து கொள்வது ஒரு மனிதனின் இயல்பு. புன்னகையில் தொடங்கி மகிழ்ச்சி ஆரவாரம் வரை இன்ப அறிகுறியாக மனிதன் காட்டி மற்றவருடன் கைகுலுக்கிக் கட்டித் தழுவிக் கொள்கிறான். இதுபோல் தான் அடையும் இன்பத்தைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள வாழ்த்துக்களை அனுப்புகிறான். பிறர் மகிழ்வதில் இன்பத்தைக் காண்பது உயரிய பண்பு. இப்பண்பை இல்லாது செய்வது பொறாமை.

பிறரது இன்பத்தை ஒருவன் தன் பேச்சாலும் செயலா லும் வருத்தாமலும் பிறரது கஷ்ட நஷ்டங்களில் உதவவும் முன்வந்தால் அவனை நல்லவன் என்று போற்றி அவனது நற்செயல்களுக்காகப் பாராட்டுவார்கள்.

அமைதி என்பது இத்தகைய இன்பத்தின் ஒரு பகுதியே. மனிதன் மற்றவனைத் தனக்குச் சமம் என நினைக்கும் போது அமைதி நிலவுகிறது. இந்த இயல்புதான் குறிப்பிட்ட காலங் களில் வாழ்த்துச் செய்திகளாக மாறி பிறரை மகிழ்விக் கிறது. இது இந்தக் குறிப்பிட்ட நாட்களில் மட்டுமே இருக்க வேண்டும் என நினையாமல் அனுதினமும் யாவரிடமும் இருக்க வேண்டும் என எதிர்பார்ப்போம்.


மதிமுகம்: 91 டிசம்பர் 1992 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00


C HITRA

# ஒன்று கூடிப் பாடுவோம் கேம்ப்கோ பாடலை!

"பாலும் க்ரீமும் நிறைந்தது. தின்னத் தின்ன ருசிப்பது.

என்றும் நாங்கள் கேட்பது. அதுவே கேம்ப்கோ க்ரீமி மில்க் சாக்கலேட்".



# ஐரோப்பிய ஐக்கிய நாடுகளுக்காக




சில ஐரோப்பிய நாடுகள் 'ஐரோப்பியப் பொருளாதார சமுதாயம்' என்ற பெயரில் 1957ல் ஒன்று சேர்ந்தன. இது வரை அதனை ஐரோப்பியப் பொதுச் சந்தை என்று கூறி வந்தனர். இப்போது அதற்குப் பொருளாதார ஒன்றியம் எனப் பெயரிட ஐரோப்பிய நாடுகள் முயல்கின்றன.

முதலில் பெல்ஜியம் பிரான்ஸ், இத்தாலி, லக்ஸம்பர்க், நெதர்லண்ட், மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் சேர்ந்து ஒரு பொருளாதாரக் கூட்டமைப்பை அமைத்தன. 1973ல் டென்மார்க், அயர்லாண்ட், கிரீஸ், ஸ்பெயின், போர்த்துகல், இங்கிலாந்து ஆகிய நாடுகளும் இந்தக் கூட்டமைப்பில் சேர்ந்தன. 1991 டிசம்பரில் இந்தப் பன்னிரெண்டு நாடுகளின் வெளிநாட்டுறவு துறை அமைச்சர்கள் நெதர்லாண்டில் மாஸ்டிரிட்ச்ட் என்ற இடத்தில் கூடி 'ஐரோப்பிய ஒன்றியத்து ஒப்பந்தம்' என்பது பற்றி ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு அந்த நாட்டுத் தலைவர்கள் அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்கள்.

இந்த ஒப்பந்தம் ஏற்பட வரலாற்று அடிப்படையான காரணங்கள் உண்டு. குறிப்பாக உலகில் பெரிய சக்திகள் எனக் கருதப்படும் அமெரிக்காவும் ரஷ்யாவும் நடத்தி வந்த மறைமுகப் போர் சோவியத் ரஷ்யா சிதறிப் போனதிலிருந்து முடிவுக்கு வந்தது. இதனால் அமெரிக்கா உயர் வல்லரசாக ஆகிவிட்டது. அதன் பிடிகளில் அகப்படாமல் தப்பவே ஐரோப்பிய நாடுகள் ஒன்று சேர்ந்து இருக்க வேண்டும் என்று அவை யோசிக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டன.

இந்த ஒப்பந்தத்தின் முக்கிய அம்சங்கள் வருமாறு: ஒன்றிய நாடுகளிடையே மக்கள் தாராளமாகப் போய் வரவும், பொருள்களைக் கொண்டு செல்லவும் தடை இருக்கக் கூடாது. இதற்கான தம் எல்லை ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இந்த ஒப்பந்தம் 1993 ஜனவரி முதல் தேதியிலிருந்து நடைமுறைக்கு வரும். அதற்கு அடுத்த ஒரு ஆண்டிற்குள் 'ஐரோப்பிய பொருளாதார அமைப்பு' ஏற்பட வேண்டும். இது 1997ல் நிறுவப்படும் ஐரோப்பிய மத்திய வங்கிக்கு உறுதுணையாக இருக்கும். இந்த நூற்றாண்டு முடிவடைவதற்கு முன் 'பொது ஐரோப்பிய நாணய முறை'யைக் கொண்டு வர வேண்டும். இந்த ஒன்றியம் கல்வி, கலாசாரம், ஆரோக்கியம், தொழில், பொருள் விற்பனையின் காப்பு, சுற்றுப்புறப் பாதுகாப்பு, பயணம், செய்தி, தொடர்பு முதலியவற்றை முன்னேறச் செய்து ஒரேவித அயல்நாட்டுக் கொள்கையை வகுக்கும். ஐரோப்பியப் பார்லிமெண்ட் நிறுவப்படும். இந்த ஒப்பந்தம் 190 பக்கங்கள் கொண்டது. இது 'ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் ஏற்படச் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தமாகக் கூடக் கருதலாம்.

இரு நாடுகளிடையே ஒப்பந்தம் ஏற்படப் பலத்த முயற்சி செய்து பல இன்னல்களைக் கடக்க வேண்டி வருகிறது. அப்படி இருக்கையில் பனிரெண்டு நாடுகள் ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு அதனை ஏற்க வேண்டும் என்றால் எவ்வளவு சிரமம். சில நாடுகள் ஒப்பந்தத்தில் கண்டுள்ள அம்சங்களைத் தம் மக்களை ஏற்கச் செய்வதில் வெற்றி பெறுவது தற்போது சிரமமாகத்தான் உள்ளது.

இந்த ஒப்பந்தத்தை ஏற்கச் செய்ய முயன்ற போது டென்மார்க் நிராகரித்தது. கிரேக்கப் பார்லிமெண்ட் பெரும்பான்மை வாக்குகளால் ஏற்றது. பிரான்ஸில் 51 சதம் ஆதரவாயும் 49 சதம் எதிராயும் வாக்குகள் பதிவாயின. லக்ஸம்பர்க்கும், நெதர்லாண்டும் ஒப்பந்தத்தை ஏற்றன. இந்த ஆண்டின் இறுதிக்குள் மற்ற நாடுகளும் தம் முடிவைத் தெரிவித்து விடும் என எதிர்பார்க்கிறார்கள்.

**ஆஸ்திரேலியாவிற்கு அடுத்து மிகச்சிறிய கண்டம் ஐரோப்பா. பூகோள அமைப்பில் இக்கண்டம் ஆசியாவை ஒட்டி இருந்த போதிலும் கி.மு 5வது நூற்றாண்டில் அஸ்ஸிரியர்கள்தான் முதன்முதலில் இதனை ஆசியாவிலிருந்து வேறாக்கினார்கள். ஆசியா கண்டத்தை உதய சூரியனின் பூமி என்றும் ஐரோப்பாக் கண்டத்தை சூரிய அஸ்தமனக் கண்டம் என்று அவர்கள் வர்ணித்தனர்.**



# பழையதே சரி!

சின்னப்பன் என்பவன் தன் ஐந்தாவது வயதில் தன் தாய் தந்தையரை இழந்து விட்டான். அதனால் அவ்வூரின் பெரிய வீட்டுப் பெரியசாமி அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் வளர்த்து வரலானார். சின்னப்பன் அந்த வீட்டில் சாப்பிட்டு விட்டு ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாக இருக்கலானான். இப்படியாகச் சில வருடங்களைக் கழித்து அவன் பதினாறு வயது வாலிபனாகி விட்டான்.

அப்போது ஒருநாள் பெரியசாமி அவனை அழைத்து "சின்னப்பா! எனக்கோ வயதாகிவிட்டது. நான் உன்னை ஒரு வேலையையும் செய்யப் பழக்காமல் விட்டது போல என் மகன்களும் உன்னை வைத்துக் காப்பாற்ற மாட்டார்கள். அதனால் இப்போது முதல் நீ ஏதாவது வேலை செய்ய ஆரம்பிக்க வேண்டும். நாளை முதல் காலையிலும் மாலையிலும் தினமும் இரண்டுமணி நேரம் செடி கொடிகளுக்குத் தண்ணீர் விடு'' என்றார்.

அதுகேட்டு சின்னப்பன் திடுக்கிட்டான். பெரியசாமியின் வீட்டின் முன் புறத்திலும் பின்புறத்திலும் பல செடிகளும், பல கொடிகளும் இருந்தன. அவற்றிற்கெல்லாம் காலையில் இரண்டுமணி நேரமும் மாலையில் இரண்டு மணி நேரமும் தண்ணீர் விடுவது என்றால் இடுப்பே ஒடிந்துவிடும்.

வேலை செய்யாமல் செடிகளுக்கு எப்படித் தண்ணீர் விடுவது என்று காட்டில் வாழும் முனிவரிடம் கேட்பது என நினைத்து சின்னப்பன் முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்றான். அவன் அவரை வணங்கித் தன் பிரச்னையைக் கூறினான்.

—பாபநாசம் சாமா—



அவரும் "நீ வேலை செய்யா மல் செடிகளும் தண்ணீர் விழச் செய்ய வேண்டும் என்றால் கிழக்கே அதோ தெரியும் ஆலமரத்தில் தலை கீழாகத் தொங்கி ஆறுமாத காலம் தவம் செய்ய வேண்டும்" என்றார். அவனும் அவ்வாறே செய் வதாகக் கூறி அந்த மரத்தின் கீழே போய் நின்றான்.

அப்போது அம்மரத்தில் ஒரு வன் தலைகீழாகத் தொங்கிக் கொண் டிருப்பதைப் பார்த்த சின்னப்பன் "ஓ! நீயும் தவம் செய்கிறாயா? எவ்வளவு நாட்களாகச் செய்கி றாய்?" என்று கேட்டான். அவனோ "முதலில் என் கட்டுகளை அவிழ்த்து விடு. பிறகு சொல்கிறேன்" எனவே சின்னப்பன் அவன் கட்டுகளை அவிழ்த்து விட்டான். அப்போது அவன் "நான் தவம் செய்ய வில்லை. என்னை நேற்றிரவு சிலர் பிடித்துக் கட்டித் தலைகீழாகத் தொங்கப் போட்டு விட்டார்கள். ஒருநாள் தொங்கியதில்தான் என்ன வலி! உயிரே போய்விடும் போல இருந்தது" என்றான்.

அது கேட்டு சின்னப்பன் "அப் படியானால் தலைகீழாகத் தொங் குவது மிகவும் சிரமமா? ஒருநாள் நீ தொங்கியதிலேயே வலி எடுத்தது என்றால் நான் எப்படி ஆறுமாத காலம் தொங்கி முனிவர் கூறிய படி தவம் செய்யப் போகிறேன்?" என்றான்.

அந்த மனிதனும் "இதோ பார்! நான் திருடன். என்னோடு சேர்ந்து திருடவா. பணம் கிடைக்கும். அப் படி இல்லாமல் தவம் செய்வதா னால் தாராளமாகத் தலைகீழாகத் தொங்கி வலியைப் பொறுத்துக் கொள்" என்றான். சின்னப்பன் தன்னால் வலியைப் பொறுத்துக் கொள்ள முடியாது என நினைத்து அந்தத் திருடனோடு அவனது இருப்பிடத்திற்குச் சென்றான்.

மறுநாள் இரவு சின்னப்பனின் உடலில் கருப்பு மையைத் தடவி அவனையும் கூட்டிக்கொண்டு திருடன் ஒரு ஊருக்குள் போனான்.

இருவரும் ஒரு சிறு வீட்டினுள் நுழைந்து அங்கிருந்த பணத்தைத்

திருடிக்கொண்டு வந்தார்கள். அது மொத்தம் இருநூறு ரூபாய்கள். அதைக் கண்ட சின்னப்பன் "பேஷ்! இருநூறு ரூபாய் கிடைத்தது. ஆளுக்குப் பாதியாகப் பிரித்துக் கொள்வோம். அதனால் ஒரு மாதம் சுகமாகச் சாப்பிடலாம்" என்றான்.

அத்திருடனோ "இதை நாம் இப்படிப் பங்கு போட்டுக் கொள்ள முடியாது. இந்த வீட்டில் இன்ன இடத்தில் பணம் இருக்கிறது என்று எனக்குத் துப்புக் கொடுத்தவனுக்கு ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும். இந்தத் தெருவில் ரோந்து சுற்றும் காவல்காரனுக்கு ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும். என் கூட்டத் தலைவருக்கு ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும். இதை எல்லாம் கொடுத்த பின் மிஞ்சுவது ஐம்பது ரூபாய். அதைப் பகிர்ந்து கொண்டால் ஆளுக்கு இருபத்தைந்து ரூபாய் கிடைக்கும். அதிலிருந்து நாங்கள் குலதெய்வத்திற்கு உண்டியலில் ஆளுக்கு பத்து ரூபாய் என்று போட வேண்டும். எனவே நமக்கு ஒவ்வொருவனுக்கும் கிடைப்பது பதினைந்து ரூபாயே" என்றான்.

சின்னப்பன் திருடனோடு வீட்டிற்குப் போய்த் தன் மீது பூசப் பட்ட கருபபு மையைப் போக்கலானான். அதற்கு நான்கு மணி நேரம் பிடித்தது. ஒவ்வொரு முறையும் திருடப் போய்விட்டு வந்து தன்



உடல் மையைப் போக்குவது மிகவும் சிரமமானது என நினைத்து திருட்டுத் தொழிலை விடக் காவல் துறையில் காவல் வீரனாகச் சேருவதால் வேலை செய்யாமல் பணம் நிறைய சம்பாதிக்கலாம் என நினைத்து அவன் ஒரு காவல் வீரனை அணுகி தனக்கு அவனது வேலை போல ஒன்று வாங்கித் தர முடியுமா என்று கேட்டான்.

அந்தக் காவல் வீரனும் "நான் என் மேலதிகாரியின் வீட்டில் அவர் சொல்லும் வீட்டு வேலைகளை எல்லாம் செய்ய வேண்டியுள்ளது. நீ எனக்கு பதிலாக என் வேலைகளை எல்லாம் என் அதிகாரியின் வீட்டில் செய்தால்



சின்னப்பனும் தேவசகாயத்தின் பயிற்சிப் பள்ளிக்குச் சென்றான். அதில் இருநூறு மாணவர்கள் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தார்கள். சின்னப்பன் தேவசகாயத்தைக் கண்டு தன் விருப்பத்தைக் கூறினான். அதைக் கேட்ட அவரும் "காவல் துறை அதிகாரி ஆவது என்பது எளிதல்ல. அவருக்கு திருடனை பிடிக்கும் ஆற்றல் இருக்க வேண்டும். அதற்கு உடல் பலமும் அறிவும் தேவை. சுறுசுறுப்புடன் இயங்கவும் வேண்டும். பயிற்சிகாலம் இரண்டு ஆண்டுகள். இரவும் பகலும் நான் கற்பிப்பதை கவனமாகக் கற்றுத் தேர்ச்சி பெற்றாலே இந்த காவல் அதிகாரி வேலை கிடைக்கும்" என்றார்.

அதைக் கேட்ட சின்னப்பன் சற்று யோசித்து விட்டு பணிவுடன் அவரிடம் "ஐயா! தாங்கள் எவ்வளவோ படித்திருக்கிறீர்கள். உலகில் கஷ்டப்படாமல் பணம் சம்பாதிக்க ஏதாவது வழி இருக்கிறதா? இருந்தால் தயவு செய்து அதைக் கூறுங்கள்" என்று கேட்டான்.

தேவசகாயம் அவனைப் பார்த்து "உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. உன் ஆசை சரியானதல்ல. ஆனாலும் எனக்குத் தெரிந்த ஒரு வழியைக் கூறுகிறேன். இவ்வூரில் கஜபதி என்கிற பணக்காரர் இருக்கிறார். நீ அவர் பக்கத்

உனக்கு மாதம் இருநூறு ரூபாய் கொடுக்கிறேன். எனக்கு லஞ்சமாக மாத வருமானம் ஆயிரக் கணக்கில் கிடைப்பதால் உனக்கு நான் தாரளமாக மாதம் இருநூறு ரூபாய் கொடுக்க முடியும்" என்றான்.

அப்போது சின்னப்பன் "என்னால் வீட்டு வேலைகளை எல்லாம் செய்ய முடியாது. நான் காவல் துறை அதிகாரியாக என்ன வழி?" என்று கேட்டான். அதற்கு அந்தக் காவல் வீரனும் "இவ்வூரில் தேவசகாயம் என்பவர் காவல் அதிகாரிகளின் பயிற்சிப் பள்ளியை நடத்தி வருகிறார். அவரை அணுகு" என்றான்.

தில் உட்கார்ந்து கொண்டு காலை இரண்டு மணி நேரமும் மாலை இரண்டு மணி நேரமும் கதை களைச் சொன்னால் அவர் ஒரு நாளைக்கு பத்து ரூபாய் வீதம் பணம் கொடுப்பார்'' என்றார்.

சின்னப்பன் கஜபதியின் வீட்டை அடைந்து அவரைக் கண்டான். கஜபதியின் உடல் மிகப் பருமனா னது. ஒரு பெரிய அறையில் அகல மான கட்டிலில் பஞ்சு மெத்தை யின் மீது அவர் படுத்திருந்தார். சின்னப்பன் அவரருகே அமர்ந்து கதைகளைக் கூறலானான். அக் கதைகள் அவருக்கு மிகவும் பிடித் துப் போயின. சின்னப்பனுக் கும் அந்த வேலை மிகவும் பிடித் தது.

ஒருநாள் சின்னப்பன் கஜபதி யிடம் ''ஐயா! எனக்கு இங்கு நிரந்தரமாக வேலை கிடைத்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி'' என்றான். ஆனால் கஜபதியோ ''நீ சொல் லும் கதைகள் என்னவோ நன்றாக இருந்தாலும் இப்படியே வெகு நாட்களுக்குத் தொடர முடியாது'' என்றார்.

சின்னப்பனும் ''ஏன்? உங்க ளிடமுள்ள பணம் எல்லாம் தீர்ந்து போய் விட்டதா?'' என்று கேட்டான். கஜபதியும் ''அதெல் லாம் இல்லை. என் பணம் ஏழு தலைமுறைகளுக்குப் போதும். பணத்தைப் பற்றிய கவலையே



எனக்கு இல்லை. ஆனால் சிறு வயதிலிருந்தே நான் சோம்பேறி யாக இருந்து விட்டேன். இதனால் எனக்குப் பல நோய்கள் வந்து விட்டன. என் உடல் மிகவும் பருத்துப் போய் அதுவே இப்போது எனக்கு பாரமாக இருக்கிறது. வைத்தியரோ என் உடல் பருமன் குறைந்தால்தான் என் நோய்களைப் போக்க முடியும் என்கிறார். என் உடலின் பருமனை குறைக்க நான் சாப்பிடும் உணவை மாற்றி பசியை அடக்கி தினமும் ஒருவேளை கஞ்சியை அவர் குடிக்கச் சொன் னார். நான் பசியை மறந்திருக் கவே உன் கதைகளைக் கேட்டு வரு கிறேன். என் உடலின் பருமனும்

குறைய ஆரம்பித்து விட்டது. இன்னும் சில வாரங்களில் நன்றாகக் குறைந்து விடும். அப்போது உன் கதைகளை நான் கேட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியமும் இராது'' என்றார்.

அதுகேட்டு சின்னப்பனும் ''ஓ! உங்கள் உடல் பருமன் குறைய ஆரம்பித்து விட்டதா?'' என்று கேட்கவே கஜபதியும் ''ஆமாம். முன்பெல்லாம் கைகால்களை கூட அசைக்க முடியாது. இப்போது முடிகிறது. நான் நாலைந்து நாட்களில் எழுந்து நடக்கவும் தொடங்கி விடுவேன். அதற்குப் பின் தினமும் காலையிலும் மாலையிலும் என் வீட்டுத் தோட்டத்துச் செடிகளுக்கு தண்ணீர் விடப் போகிறேன். இது எனக்கு வைத்தியர் கூறும் தேகப் பயிற்சி. இதனால் நான் குணமடைந்து விடுவேன்'' என்றார்.

இதைக் கேட்ட சின்னப்பன் ''ஐயோ! செடிகளுக்கு தண்ணீர் விடுவதா? அது மிகவும் கஷ்டமான வேலை ஆயிற்றே'' என்றான். அப்போது கஜபதி ''ஆமாம். கஷ்டம்தான். அப்படிக் கஷ்டப் படாமல் சாப்பிட்டு விட்டு சோம்பேறியாக இவ்வளவு நாட்கள் நான் இருந்ததால்தான் என் உடம்பு இப்படிப் பெருத்து விட்டது. பல நோய்களும் என்னைப் பற்றிக் கொண்டன. இப்படி நோய்களால் கஷ்டப்படுவதை விட உடல் வளைய வேலை செய்து நோய்களைப் போக்கிக் கொள்வது எவ்வளவோ மேல்'' என்றார்.

அதைக் கேட்ட சின்னப்பனுக்கு புதியதோர் உண்மை புலப்பட்டது. அவன் சில நாட்கள் கஜபதியிடம் வேலை செய்து விட்டுத் தன் ஊருக்குப் போய் பெரியசாமியின் வீட்டில் வேலைக்கு அமர்ந்து முழுமனதுடன் உடல் வளைய வேலையைச் செய்து நல்ல வேலைக்காரன் என்ற பெயரையும் பெற்றான்.






*[இளவரசி வித்தியாவதி திடீரென்று காணாமல் போகவே அவளைத் தேடிக் கண்டுபிடிக்க மகேந்திரன் என்ற இளைஞன் கிளம்பினான். அவன் வழியில் ஒரு யோகியை தரிசித்து அவர் கொடுத்த மோதிரத்தை அணிந்து கொண்டு தன் பயணத்தைத் தொடங்கினான். வழியில் ஒரு மாளிகையைக் கண்டு அதன் காவலாளியின் அனுமதி பெற்று அவனது அறையில் தங்கினான். அப்போது—]*

இரவில் படுத்த மகேந்திரனுக்கு சரியாகத் தூக்கம் வரவில்லை. அவன் யோகியார் கொடுத்த மோதிரத்தை அடிக்கடி தொட்டுப் பார்த்துக் கொண்டான். இரவு வெகு நேரமான பிறகே அவனுக்கு தூக்கம் வந்தது. காலையில் எழுந்து முகம் துலக்கி அவன் இருந்த போது காவலாளி ஒரு தட்டில் கொஞ்சம் பழங்களை எடுத்து வந்து கொடுத்தான்.

அப்போது மகேந்திரன். "உன் எஜமானர் வந்து விட்டார் போலிருக்கிறதே" என்று கேட்டான். காவலாளியும் "உனக்கு அது எப்படி தெரிந்தது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான். மகேந்திரனும் "நேற்றிரவு நடந்த அமளியைக் கண்டு ஊகித்தேன். இனியும் இங்கே இருந்தால் உனக்கு ஆபத்து



தானே'' என்று கேட்டான்.

காவலாளியும் ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. என் எஜமானர் இந்தப் பக்கமே வரமாட்டார். நீ இன்னும் நாலைந்து நாட்கள் கூட இங்கே இருந்து விட்டுப் போகலாம். நீயோ வேலை தேடிப் போவதாகச் சொன்னாய். இங்கேயே உனக்கு ஏதாவது வேலை கிடைக்குமா என்று பார்க்கிறேன்'' என்றான்.

மகேந்திரனும் ''மிக்க நன்றி. இங்கேயே எனக்கு உன் எஜமானர் வேலை கொடுத்து விட்டால் எனக்கும் சந்தோஷமாக இருக்கும்'' என்றான். காவலாளியும் ''இது பற்றி நான் கவனித்துக் கொள்கிறேன். தக்க சமயம் பார்த்து என் எஜமானரிடம் பக்குவமாகக் கூறி உனக்கு வேலை கிடைக்கும்படிச் செய்கிறேன். கவலைப்படாதே'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

மகேந்திரன் அந்த அறையின் சன்னல் வழியாக வெளியே பார்த்தான். அங்கு உள்ள நிலையைக் கண்டதும் சட்டென அவனுக்கு யோசனை தோன்றியது. அங்குள்ள வேலைக்காரர்களோடு சேர்ந்து கொண்டு தானும் வேலை செய்வது போல அங்கும் இங்கும் அந்த மாளிகையில் திரிந்தால் அதுபற்றி விவரமாகத் தெரிந்து கொள்ளலாம் என நினைத்தான்.

இப்படி யோசித்த மகேந்திரன் உடனே ஒரு வெள்ளைத் துணியை எடுத்து தலைப்பாகையாகச் சுற்றிக் கொண்டான். அவன் மெதுவாக அடிமேல் அடிவைத்து அங்குள்ள வேலைக்காரர்களோடு சேர்ந்து விட்டான். சிலர் அங்குள்ள தோட்டத்தில் ஆங்காங்கு வைக்கப்பட்டிருந்த சிலைகளைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். வேறு சிலர் மாளிகைக் கதவுகளையும் வேறு சிலர் சன்னல்களையும் துடைத்துக் கொண்டிருந்தனர். அவர்களில் யாருமே மகேந்திரனைக் கண்டு கொள்ளவில்லை. அவன் மாளிகையின் சன்னல்களைத் துடைத்தவாறே ஒவ்வொரு அறையாகப் பார்த்துக்

கொண்டே சென்றான்.

அந்த மாளிகையின் எல்லா அறைகளும் சுத்தமாயும் காலியாகவும் இருந்தன. சில அறைகளின் கதவுகள் மூடப்பட்டும் இருந்தன. அவற்றை அவன் சன்னல் வழியாகப் பார்த்தான். அறைகளில் நிலைக் கண்ணாடிகள் வைக்கப் பட்டிருந்தன. மகேந்திரன் அந்த அறைகளைப் பார்த்தவாறே ஓரிடத்தில் சிறு நடைவழி இருப்பது கண்டு அதன் வழியே சென்றான். அவன் ஒரு அறையை அடைந்து பாதி மூடப்பட்டிருந்த கதவைக் கண்டான். அவன் அதை முழுவது மாகத் திறந்து அந்த அறைக்குள் சென்றான்.

அந்த அறையில் நிலைக் கண்ணாடிகளோடு தேவியின் சிலை ஒன்றும் இருந்தது. அந்தச் சிலையின் முன் பட்டுக் கம்பளம் விரிக்கப்பட்டு அதன் மீது மூன்று பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் முதியவர்கள். காவி உடை அணிந்திருந்தார்கள். அவர்களில் இருவர் தம் கைகளில் ஓலைச் சுவடிகளை வைத்துக் கொண்டு பரிசீலித்துக் கொண்டிருந்தார்கள். மற்றவர் தரை மீது கிழிக்கப்பட்ட கோடுகளைச் சரிபார்த்துக் கொண்டிருந்தார்.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்த மகேந்திரனைப் பார்த்து அவர்கள் "யார் நீ? இங்கே ஏன் வந்தாய்?" என்று கேட்டார்கள். அவனும் தான் அந்த அறை





யைச் சுத்தம் செய்ய வந்திருப்ப தாகக் கூறினான்.

அப்போது ஒருவர் "இந்த அறை சுத்தமாகத்தான் இருக் கிறது. நீ எதுவும் செய்ய வேண் டாம் பேசாமல் போய்விடு" என் றார். மகேந்திரனும் "அப்படியே சுவாமிகளே!" என்று கூறி அவர் களைப் பணிவுடன் வணங்கி விட்டு அங்கிருந்து சென்றான். அவன் அங்கிருந்து வேறு எங்கும் செல்லாமல் நேராகத் தானிருந்த காவலாளியின் அறைக்கு வந்து விட்டான்.

அதற்குச் சற்று நேரத்திற்குப் பின் காவலாளியும் வந்தான். அவன் மகேந்திரனைப் பார்த்து "நன்றாக இளைப்பாறினாயா?" என்று கேட்டான். மகேந்திரனும் "ஆம். ஆனால் இங்கு சுற்றிலும் பல வேலைக்காரர்கள் செய்யும் வேலைகளைப் பார்த்தவாறே பொழுதைப் போக்கினேன். எப் படியோ நேரம் கழிந்து விட்டது. அது சரி, நீ உன் எஜமானரைப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

காவலாளியும் "என் எஜமா னர் இந்தத் தடவை தாம் மட்டும் வரவில்லை. கூடவே மூன்று பெரியவர்களை அழைத்து வந்தி ருக்கிறார். அவர்களோடு சேர்ந்து உணவு உண்ட பின் என் எஜமா னர் தம் அறைக்குள் போய்விட் டார். அதனால் அவரை நான் பார்க்க முடியவில்லை. இன்று மாலை அவர் தோட்டத்தில் உலாவ வருவார். அப்போது அவ ரைக் கண்டு உன் விஷயமாகப் பேசுகிறேன்" என்றான்.

காவலாளி படுத்துத் தூங்க லானான். மகேந்திரனோ, அந்த அறையின் சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு பொழுதைப் போக்கினான். மாலையாகி விட் டது. அப்போது ஒருவர் தோட்டத் திற்குள் வந்து உலாவிக் கொண்டி ருப்பதை அவன் கண்டான். அந்த மனிதரின் தோற்றத்தையும் ஆடை களையும் கொண்டு அவரே அந்த மாளிகையின் எஜமானராக இருக்க வேண்டும் என்று மகேந்



திரன் ஊகித்துக் கொண்டான்.

தோட்டத்திலிருந்தவர் இரண்டொரு முறை காவலாளியின் அறையைக் கவனிப்பதை மகேந்திரன் பார்த்தான். அவன் தன் நண்பனைத் தட்டி எழுப்பி "நண்பா! உன் எஜமானர் உன்னைத் தோட்டத்தில் எதிர்பார்க்கிறார் போலிருக்கிறது. எழுந்து போய்ப் பார்" என்றான்.

காவலாளியும் சட்டென எழுந்து தன் உடைகளைச் சரிப்படுத்திக் கொண்டு தோட்டத்தில் விரைந்து சென்றான். அவன் அந்த மனிதரை வணங்கி ஏதோ கூற, அவரும் பதிலுக்கு ஏதோ சொல்கிறார் என்பதை மகேந்திரன் தான் நின்ற இடத்திலிருந்தே தெரிந்து கொண்டு விட்டான். அவர் மாளிகைக்கு அப்பால் எதையோ சுட்டிக் காட்டிப் பேசியதையும் காவலாளி தலையை அசைத்து விட்டுப் பணிவுடன் அவரை வணங்கி விட்டுத் திரும்பி வருவதையும் மகேந்திரன் கண்டான்.

திரும்பி வந்த காவலாளி மகேந்திரனைக் கண்டு புன்னகை புரிந்தவனாய் "உனக்கு ஒரு நற்செய்தியைக் கொண்டு வந்திருக்கிறேன். என் எஜமானர் இந்த மாளிகைக்கு மறுபுறமுள்ள காவலாளியை மாற்றும்படிக் கூறினார். அங்கு இருப்பவர்கள் எல்லாம் பெண்களே. அங்கு காவல் புரிய உன்னைச் சிபாரிசு செய்தேன். அவரும் சரி என்று கூறி விட்டார்" என்றான்.

மகேந்திரனும் உற்சாகத்துடன் "மிக்க நன்றி. இவ்வளவு விரைவில் நீ எனக்கு வேலை வாங்கிக் கொடுத்ததை நான் என்றென்றும் மறக்க மாட்டேன்" என்றான். அக்காவலாளியும் "சரி. நீ இப்போதே என்னுடன் வா. உன்னை அங்கு அழைத்துச் செல்கிறேன். சாதாரணமாக அப்பகுதியில் மனித நடமாட்டமே இருக்காது. எல்லாக் கதவுகளும் எப்போதும் மூடித்தான் இருக்கும்" என்றான்.

அப்போது நன்கு இருட்டி விட்டது. காவலாளி விளக்கை

ஏற்றி அதை எடுத்துக் கொண்டு வழிகாட்டியவாறே நடக்க, அவன் பின்னால் மகேந்திரன் செல்லலானான். இருவரும் கொஞ்ச தூரம் போனார்கள். அப்போது சங்கிலிகளால் இறுகப் பிணைக்கப்பட்டிருந்த ஒரு கதவு தென்பட்டது.

அங்கே நின்று பார்த்த போது எதுவுமே தெளிவாகத் தெரியவில்லை. காவலாளி அப்போது மகேந்திரனிடம் "இங்கே உனக்கு வேலை ஒன்றும் அதிகமாக இல்லை. நான் போய் உனக்கு உணவு கொண்டு வருகிறேன். நீ இங்கே காவலுக்கு இருந்துவிட்டு காலையானதும் என் அறைக்கு வந்து இளைப்பாறலாம். நான் வந்து காலையில் உன்னை விடுவிப்பேன். இந்த விளக்கு இங்கேயே இருக்கட்டும்" என்றான். மகேந்திரனும் அங்கே காவல் புரிவதாகக் கூறினான்.

காவலாளி அங்கிருந்து போய்விட்டு அரை மணி நேரத்தில் உணவோடு திரும்பி வந்தான். அதனை மகேந்திரனிடம் கொடுக்கவே அவனும் அதனை உண்டான். அதற்குப்பின் காவலாளி அவனிடம் ஒரு சாவியைக் கொடுத்து "இதை பத்திரமாக வைத்துக் கொள். இது இந்தக் கதவின் சாவி. ஆனால் இந்தக் கதவை மட்டும் திறந்து கொண்டு உள்ளே போகாதே. ஏனெனில் உள்ளே அடர்ந்த காடு உள்ளது. அங்கேபோய் வழி தவறிவிட்டால் திரும்ப இங்கு வருவது கடினம்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

அவன் போனபின் மகேந்திரன் "இது பெண்கள் வாழும் இடம் என்று காவலாளி கூறினானே. ஒருவேளை இளவரசி வித்தியாவதி இங்கு இருக்கக் கூடுமோ? இது பற்றி அறிந்தேயாக வேண்டும். அதற்கு என்ன செய்யலாம்" என்று யோசித்தவாறே அங்கே காவலாக உட்கார்ந்தான்.

(தொடரும்)



# கூட்டம் இல்லையே!

பயில்வான் பலராமன் பல குஸ்திப் போட்டிகளில் வெற்றி பெற்றுப் புகழ் பெற்றவன். அவனது ஊரிலும் அவனதுவாட்டசாட்ட உருவம் கண்டு எல்லோரும் அவனைக் கண்டு பயந்தார்கள். இப்படிப்பட்டவன்தான் ஊர்க் காவலுக்கு ஏற்றவன் என நினைத்து அவ்வூர் கிராம அதிகாரி அவனைக் காவலாளியாக நியமித்தார்.

ஒரு நாளிரவு திருடர்கள் கிராம அதிகாரி வசூலித்த வரிப்பணத்தையும் இதர விலையுயர்ந்த பொருள்களையும் இரும்புப் பெட்டியின் பூட்டை உடைத்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

கிராம அதிகாரி பலராமனைக் கூப்பிட்டு "நீ என்ன காவல் புரிகிறாய்? திருடர்கள் வந்து பூட்டை உடைத்துப் பணத்தை எடுத்துக் கொண்டுபோகும் வரை பார்த்துக் கொண்டா இருந்தாய்? குத்துச்சண்டையில் பயில்வான்களை அடித்து வீழ்த்துவது போலத் திருடர்களை ஏன் அடித்து வீழ்த்தவில்லை?" என்று கேட்டார்.

பலராமனும் "நான் அவர்களை அடித்து வீழ்த்தி இருப்பேன். ஆனால் குத்துச் சண்டைகளில் கூட்டம் கூடி என்னை உற்சாகப் படுத்தும். அப்போது குத்துக்களை விட்டு எதிரியை அடித்து வீழ்த்துவேன். அதுபோல இங்கு கூட்டம் இருந்து என்னை உற்சாகப்படுத்தி இருந்தால் அந்தத் திருடர்களையும் அடித்து வீழ்த்தி இருப்பேன்" என்றான்.

அதைக் கேட்டு கிராம அதிகாரி தன் தலையில் அடித்துக் கொண்டு "உன்னைக் காவலாளியாக நியமித்தது என் முட்டாள்த்தனம்" என்று கூறி அவனை அப்போதே வேலையிலிருந்து நிறுத்திவிட்டார்.





# யார் வீரன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த் வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே இந்த நடுநசி வேளையில் நீ இப்படிப் பிடிவாதமாக ஒரு வேலையைச் செய்ய முயல்வதைக் கண்டால் இதற்குத் தக்க பலனை நீ அடைய முடியுமா என்று சந்தேகிக்க வேண்டி இருக்கிறது. ஒரு சிலர் தம் துணிச்சலுக்கும் வீரதீரச் செயல்களுக்கும் தக்க பலனைக் காண்பது உண்டு. வேறு சிலருக்கு அத்தகைய பலன் கிட்டாமல் போவதும் உண்டு. இதை விளக்க உனக்கு வீரமல்லன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று

## வேதாளம் சொல்லும் கதை



கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

கலிங்க நாட்டைக் கனகவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மெய்க்காவலாளி வீரமல்லன் கட்டுமஸ்தான உடலும் பலமும் சக்தியும் துணிச்சலும் உடையவன். வில், வாள் ஆகிய போர்களிலும் மல்யுத்தத்திலும் அவனுக்கு இணை யாருமே இல்லை என்று பெயர் பெற்றவன் மன்னனுக்கும் அவனிடம் அலாதிப் பிரியம் இருந்தது.

கனகவர்மனின் ஒரே மகள் கனகாங்கி, அவனுக்கு ஆண் சந்ததி வேறு எதுவும் இல்லை. அவள் விவாக வயதையும் அடைந்துவிட்டாள். அதனால் அவளுக்கு ஏற்றவனைத் தேர்ந்து எடுத்து அவளது விவாகத்தை செய்துவிடத் தீர்மானித்தான். ஆனால் கனகாங்கியும் வீர மல்லனும் ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்கள் என்பது மன்னனுக்குத் தெரியாது.

இப்படி இருக்கையில் வங்க நாட்டு இளவரசன் வாமதேவன் பலநாடுகளுக்குச் சென்றவாறே கலிங்கத்தின் தலைநகரை அடைந்தான். கனகவர்மன் அவனைத் தக்க மரியாதைகளுடன் வரவேற்றுத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றான். கனகவர்மன் வாமதேவனைத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள விரும்பினான். அதனால் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து அவன் வாமதேவனை ஒரு தனி மாளிகையில் தங்க வைத்தான்.

ஒரு நாள் கனகவர்மன் வாமதேவனை அழைத்துக் கொண்டு தன் யானைக் கட்டுத்தறியையும் குதிரைகள் கட்டப்படும் இடத்தையும் காட்ட அழைத்துப் போனான். குதிரை லாயத்தில் ஒரு வெள்ளை நிறக் குதிரையைக் கண்ட வாமதேவன் "இந்தக் குதிரை மிக அழகாக இருக்கிறதே. இதன் மீது ஏறி சவாரி செய்ய விரும்புகிறேன்" என்றான்.

அதைக் கேட்ட கனகவர்மன் "இது முரட்டுக் குதிரை. போன

வாரம் தான் வாங்கப்பட்டது. இன்னமும் சரியாகப் பழக்க வில்லை. யாராலும் அடக்க முடி யாத இதை என் மெய்க் காவ லாளி வீரமல்லனால்தான் அடக்க முடிந்தது'' என்றான்

அப்போது மன்னனோடு கூட இருந்த வீரமல்லன் வாமதேவனி டம் "நீங்கள் இந்தக் குதிரை மீது அமர்ந்து சவாரி செய்ய விரும்பி னால் நானும் உங்களுக்குத் துணை யாக வருகிறேன்'' என்றான். வாமதேவனோ அவனை அலட் சியமாகப் பார்த்து "நீ அவ்வளவு சாமர்த்தியசாலியா? நீ ஒன்றும் வரவேண்டாம்'' எனக் கூறி அந்தக் குதிரை கட்டை அவிழ்த்து அதன் மீது ஏறி அமர்ந்து விட்டான்.



மறுநிமிடமே அக்குதிரை வேக மாக ஓடியது. அதை வாமதேவன் அடக்க முயன்றும் அது அடங்கா மல் தன் இஷ்டத்திற்குப் போய் அவனை ஒரு கற்குவியலின் மீது தள்ளியது. அதனால் அவனது உடலிலும் தலையிலும் பலத்த காயங்கள் ஏற்பட்டன.

வீரர்கள் ஓடிச்சென்று வாம தேவனைத் தூக்கிக் கொண்டு போய் அரண்மனையில் படுக்க வைத்தார்கள். நடந்ததைக் கண்டு கனகவர்மன் மிகவும் வருந்தி அவ னுக்குத் தக்க சிகிச்சை அளிக்க வைத்தியர்களை வரவழைத்தான். அவர்களது வைத்தியத்தால் அவ னது காயங்கள் ஒருவாரத்தில் ஆறி விட்டன. ஆனால் பலஹீனத்தால் எழுந்து நடமாட முடியவில்லை.

வாமதேவன் தன் மனதிற்குள் தன்னைத் தானே நொந்து கொண் டான். அவன் தன்னால் அந்த முரட்டுக் குதிரையை அடக்க முடியவில்லை என்பதோடு வீர மல்லனை விடத் தான் சிறந்தவன் என மன்னனுக்கும், கனகாங்கிக் கும் காட்ட முடியவில்லையே என எண்ணி மனம் நொந்து போனான்.

இந்நிலையில் ஒரு நாள் மன் னன் வாமதேவனைக் காண வந் தான். அவனுடன் கனகாங்கியும் வீரமல்லனும் வந்தனர். அப் போது வாமதேவன் வீரமல்லனை



இதற்கு வீரமல்லன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்று அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

வீரமல்லனுக்கு வாம தேவனின் மனநிலை புரிந்துவிட்டது. அவன் தன் மீது பொறாமை கொண்டே அவ்வாறு சவால் விடுகிறான் என்பதனையும் நன்கு தெரிந்து கொண்டுவிட்டான். தானும் அவனைப் போல உணர்ச்சிவசப்பட்டு விடக் கூடாது என்ற முடிவுக்கும் வந்தான்.

வீரமல்லன் சற்று யோசித்து விட்டு "இளவரசே! சந்தேகத்திற்கு இடமில்லாமல் தாங்கள் மாபெரும் வீரரே. அதனால்தான் தாங்கள் மிகவும் பலஹீனமாக இருந்த போதிலும் என்னுடன் சண்டை போடத் தயார் எனக் கூறுகிறீர்கள். ஆனால் இப்போது உங்களோடு சண்டையிட முடியாத நிலையில் இருக்கிறேன். அதனால் என்னை மன்னியுங்கள்" என்றான் பணிவோடு.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் கனகவர்மன் வீரமல்லனையும் வீரர்களையும் அழைத்துக் கொண்டு வேட்டைக்குச் சென்றான். ஓரிடத்தில் அடர்ந்த புதரின் பின்னிருந்து பயங்கரமாக ஒரு புலியின் உறுமல் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டனர். அது திடீரென மன்னனை நோக்கிப்

எரித்து விடுபவன் போலப் பார்த்து "வீரமல்லா! உன்னைப் பற்றி யார் யாரோ என்னென்னவோ சொல்லக் கேட்டேன். நீ எனக்குச் சமமானவனா? இப்போது என்னோடு வாள் போரும் மல்யுத்தமும் நீ செய்ய வருகிறாயா? என்னை நீ வென்று விட்டால் இந்த உலகிலேயே உன்னை விட மாவீரன் யாரும் கிடையாது என ஒப்புக் கொள்கிறேன்" என்றான்.

அதுகேட்டு மன்னனும் கனகாங்கியும் திடுக்கிட்டனர். படுக்கையிலிருந்து எழமுடியாத நிலையில்லாமல் இருக்கும் வாமதேவன் வீரமல்லனுடன் மோத முடியுமா?



பாய்ந்து வரவே எல்லா வீரர்களும் பயந்து ஓடலாயினர்; குதிரைகளோ மிரண்டு ஓடின.

மன்னனும் தன் வீரர்கள் எல்லாம் உயிருக்கு பயந்து ஓடுவதைக் கண்டான். தன்னைப் புலியிடமிருந்து காப்பாற்ற யாராவது முன் வருவானா எனவும் பார்க்கலானான். அவனது எதிர்பார்ப்பு வீண் போகவில்லை. தன் மெய்க்காவலன் வீரமல்லனை அவன் பார்த்தான்.

அப்போது வீரமல்லனும் மன்னனைக் காக்க ஓடினான். பாய்ந்து வரும் புலியை அவன் தன் கைகளால் பிடித்துத் தள்ள முயன்றான். புலி தன் நகங்களால் அவனைக் கீறி காயப்படுத்தியது. ஆனால் வீரமல்லன் பயப்படாமல் அதனைப் பலமாக குத்தி அடித்து வீழ்த்தினான். அதுவும் அடிகளைத் தாங்க முடியாமல் இறந்து விழுந்தது.

மன்னன் வீரமல்லனைக் கட்டித் தழுவிக் கொண்டு "நீ என் உயிரைக் காத்தாய். உனக்கு என்ன வேண்டுமோ கேள் கொடுக்கிறேன்" என்றான். வீரமல்லனோ "அரசே! நான் தங்களது மெய்க் காவலாளி. இப்போது என் கடமையைத்தான் செய்திருக்கிறேன். இது ஒன்றும் மகத்தான செயல் அல்லவே" என்று பணிவுடன் கூறினான்.

வேட்டையிலிருந்து யாவரும் அரண்மனைக்குத் திரும்பினார்கள். மன்னன் ராஜவைத்தியரை அழைத்து வீரமல்லனுக்குச் சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்தான். பதினைந்து நாட்களில் காயங்கள் ஆறி வீரமல்லன் முற்றிலும் குணமடைந்து விட்டான்.

இதற்கு இரண்டு மாதங்களுக்குப் பின் வழக்கமாகக் கொண்டாடப்படும் வசந்தோற்சவம் வந்தது. அது சமயம் பலபோட்டிகள் நடக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

ஒரு மைதானத்தில் மேடை போடப்பட்டு அதில் மன்னன் அமர ஆசனம் போடப்பட்டிருந்



தது. மைதானத்தைச் சுற்றி வட்ட வடிவில் மக்கள் நின்று கொண்டிருந்தார்கள். மைதானத்தின் மத்தியில் ஒரு முரட்டு காளை நின்றிருந்தது. அதை அடக்குபவனுக்கு லட்சம் வராகன்கள் பரிசு.

மன்னன் தனக்காகப் போடப்பட்ட ஆசனத்தில் அமர்ந்து அந்தப் போட்டியை கவனிக்கலானான் அவனருகே வீரமல்லனும் சில வீரர்களும் நின்றனர். காளையை அடக்க மாவீரர்கள் வந்தனர். ஆனால் அவர்களால் அந்த முரட்டு காளையை அடக்க முடியவில்லை. அதுவோ அவர்களைத் தன் கொம்புகளால் முட்டித் தூக்கி எறிந்தது.

தன்னை எதிர்க்க யாரும் இல்லாதது கண்டு அக்காளை சுற்றிலும் பார்த்தது. அப்போது அதன் கண்களில் மன்னன் அணிந்திருந்த சிவப்பு நிற அங்க வஸ்திரம் பட்டுவிடவே அது மிரண்டு கூட்டத்தில் பாய்ந்தது. அதனால் மக்கள் பயந்து ஓடிப்போயினர்.

காளையோ மன்னன் இருந்த இடத்தை நோக்கிப் பாய்ந்தது. அங்கு இருந்த கனகாங்கியும் மற்ற அரச குடும்பத்தினரும் அலறினார்கள். அப்போது வீரமல்லன் ஓடிப் போய் காளையின் கொம்புகளைப் பலமாகப் பிடித்து அதைத் தள்ளலானான். காளையோ அவனது பிடியிலிருந்து திமிற முயன்றது.

ஆனால் வீரமல்லன் தன் பிடிப்பைத் தளர்த்தவில்லை. அவன் அதன் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு அதன் உடலில் பல உதைகள் விட்டான். அது துள்ளவே வீரசிம்மன் அதன் முன்னங் கால்கள் இரண்டையும் ஒன்று சேர்த்துப் பிடித்து தரை மீது பலமாக அழுத்தினான். அது வலி தாங்க மாட்டாமல் கத்தியது. அதன் கால்களில் ஒன்று ஒடிந்து போயிற்று. அதன் வாயிலிருந்து ரத்தம் 'குபுகுபு'வென்று கொட்ட அது செயலற்றுக் கிடந்தது.

இதைக் கண்ட மக்கள் வீரமல்லனைப் பாராட்டி கோஷங்கள் எழுப்பினார்கள். மன்னனும்

வீரமல்லனிடம் "நீ இரண்டாவது தடவையாக என்னைக் காப்பாற்றி இருக்கிறாய். இந்த முரட்டுக் காளையை அடக்கியதற்காக இப்போட்டிக்கான பரிசை நீ பெற்றுக்கொள்" என்றான்.

அப்போது வீரமல்லன் "அரசே! நான் இந்தப் போட்டியில் கலந்து கொண்டு இந்தக் காளையை அடக்கவில்லை. தங்களை காக்கும் பணியில்தான் இதனை அடக்கினேன். அதனால் போட்டிக்கான பரிசை நான் பெறுவது முறையல்ல. முதலில் காயப்பட்டு துடிக்கும் இந்தக் காளையை கவனிக்கச் சொல்லுங்கள்" என்றான்.

மன்னனும் "சரி நீ அந்தப் பரிசை ஏற்க வேண்டாம். உனக்கு நான் வேறொரு பரிசை அளிக்கப் போகிறேன். நான் என் மகளை உனக்குக் கல்யாணம் செய்து வைக்க நினைக்கிறேன். உனக்குச் சம்மதமா" என்று கேட்டான். அதற்கு வீரமல்லனும் "அதற்கு நான் தகுதி பெற்றவன் என நினைத்து அரசகுமாரியும் என்னை மணக்கச் சம்மதித்தால் நான் இதற்கு ஒப்புக் கொள்கிறேன்" என்றான்.

மன்னன் தன் மகளைப் பார்க்கவே அவளும் வெட்கத்தோடு புன்னகை புரிந்து தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். பிறகு என்ன! வீரமல்லனுக்கும் கனகாங்கிக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.



வேதாளம் இக்கதையை கூறி "மன்னனே! வாமதேவன் கனகாங்கியை மணந்து கலிங்க நாட்டைத் தனதாக்கிக் கொள்ள விரும்பினான். அவன் துணிச்சலும் வீரமும் கொண்டவன் என்பது அவன் முரட்டுக் குதிரை மீது சவாரி செய்ததிலிருந்து தெரிகிறது. அவன் குதிரையை அடக்க முடியாமல் போனதைப் பெரியதாகக் கருதக் கூடாது. அவன் தன் காயங்கள் ஆற, உடல் பலஹீனமாக இருந்த போதிலும் வீரமல்லனுடன் மற்போர் புரிவதாகக் கூறியதும் அவனது வீரதீரத்தைக் காட்டுகிறது.

ஆனால் வீரமல்லனைப் பற்றி இப்படிக் கூற முடியாது. அவன் வாமதேவனுடன் சண்டையிடச் சம்மதிக்கவில்லை. மன்னனைக் காப்பாற்றப் புலியுடன் சண்டையிட்டான் என்றால் அது தன்னைக் காத்துக் கொள்ளத்தானே. அது போலக் காளையுடன் மோதியதையும் கூறலாம். அவன் போட்டியில் கலந்து காளையை அடக்கவில்லை. காளையை அவன் அடக்கியதும் தன்னைக் காத்துக் கொள்ளத்தானே. எனவே வீரமல்லன் வாமதேவனை விட உயர்ந்தவன் என்று எப்படிக் கூறமுடியும்? இச்சந்தேகத்திற்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''அந்த இருவரில் வீரமல்லனே சிறந்த வீரன் என்பதில் சந்தேகமில்லை. வாமதேவன் செய்ததெல்லாம் வீரமல்லன் மீது பொறாமை கொண்டு செய்ததே. வீரமல்லன் அவனோடு சண்டை போட மறுத்தது வாமதேவன் பலஹீனமாக உள்ளான் என்ற காரணத்தாலேயே. இது ஒரு சுத்த வீரனின் லட்சணம். புலியோடும் காளையோடும் சண்டை போட்டதும் தன் தலையாய கடமை, நாட்டின் மன்னனைக் காக்க வேண்டும் என்பதுதானே யொழிய, தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் அல்ல. எனவே வீரமல்லன் வாமதேவனை விடத் துணிச்சலும் வீரமும் தீரமும் உடையவன் என்பது தெளிவாகத் தெரிகிறது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—49

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## கூக்கூக் குருவி



ஒருநாள் மன்னன் சாலமன் பறக்கும் சிம்மாசனத்தில் அமர்ந்து பயணம் செய்து கொண்டிருக்கையில் வெய்யில் காய்ந்தது. அப்போது தன்னருகே பறந்து கொண்டிருந்த கழுகுகளைத் தனக்கு நிழல் கொடுக்கும்படிக் கேட்கவே அவை மறுத்தன. அதனால் கோபம் கொண்ட சாலமன் அக்கழுகுகளின் கழுத்தைச் சுற்றிலுமுள்ள இறகுகள் உதிர்ந்து போகக்கடவது என்று சபித்தார். அப்போது சில கூக்கூக் குருவிகள் கூட்டமாகப் பறந்து வந்து அவருக்கு நிழலைக் கொடுத்தன. அதனால் மகிழ்ந்த சாலமன் மன்னன் அவற்றின் தலைகளில் அழகிய குஞ்சங்கள் இருக்கச் செய்தார் என்று ஒரு பழங்கதை சொல்லப்படுகிறது.

நம் நாட்டில் மரங்கொத்தி வகையைச் சேர்ந்த இந்தவகைப் பறவைகள் தம் தலை மீது கொண்டைகளை உடையவை. உடல் மீதும் இறக்கைகளிலும் வாலின் மீதும் இவற்றிற்கு வரிக்குதிரைக்கு உள்ளது போலக் கோடுகள் உண்டு. ஒரு அடி உயரமுள்ள இப்பறவை மண்ணைத் தோண்டும்போது இதன் கொண்டை பின்புறமாய் மடிந்திருக்கும். இப்பறவை மகிழ்ந்து போனால் இதன் கொண்டை விரிந்து பார்க்க அழகாகத் தென்படும். இது ஹூ-பூ, ஹூ-பூ என மெல்லிய குரலில் கத்துவதால் இதற்கு 'ஹூபோ' என ஆங்கிலத்தில் பெயரிடப்பட்டுள்ளது.

மரப் பொந்துகளிலும், சுவர்களின் இடுக்குகளிலும், கூரைகளின் கீழும் குப்பை, குச்சிகளைக் கொண்டு இது தன் கூட்டைக் கட்டுகிறது. இது வயல்களிலுள்ள புழு, பூச்சிகளைப் பிடித்துத் தின்று விவசாயிகளின் நண்பனாகத் திகழ்கிறது.

# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

*ஆசிரியர்*

## கோபிநாத் மோஹந்தி—'பரஜ்'



ஒரிஸ்ஸா மாநிலத்தில் கோராபட் மாநிலத்துக் காட்டுப் பகுதியில் சிறுசிறு கிராமங்கள் பல உள்ளன. இவற்றில் பரஜு, கோண்டா முதலிய மலைச் சாதியினர் வாழ்கிறார்கள். இவர்கள் எழுத்தறிவே இல்லாத அப்பாவி மக்கள். அதனால் மிகவும் நாகரீகமானவர்கள் என்று கூறிக் கொள்பவர்கள் இவர்களை ஏமாற்றிச் சுரண்டுகிறார்கள்.

சுக்ரோ ஜானி என்பவன் ஏழைக் குடியானவன். அவனுக்கு மனைவியும், பாண்டியா, திக்ரு என்று இரு மகன்களும் ஜூலி, பீலி என்ற இரு மகள்களும் இருந்தனர். ஒருநாள் சுக்ரோவின் மனைவியை ஒரு புலி கவ்விக் கொண்டு போய் விட்டது.

தன் ஊருக்கு வந்த ஒரு அதிகாரியின் கோபத்திற்கு ஆளான சுக்ரோ அவனைத் திருப்திப்படுத்த லஞ்சம் கொடுக்க வேண்டியதாயிற்று. அவன் கையிலோ செப்புக் காசு கூடக் கிடையாது. எனவே ஒரு வட்டிக் கடைக்காரனிடம் கடன் வாங்கினான். அந்த வட்டிக் கடைக்காரனோ மிகவும் கொடியவன். அவன் தான் கொடுத்த கடனுக்கு சுக்ரோவின் இளையமகன் சம்பளமில்லாமல் தன் வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும் என்ற நிபந்தனை விதித்தான். சுக்ரோ அதற்கு ஒப்புக் கொண்டான். அவனது கடன் வட்டிக்கு வட்டி என்று ஏறிக் கொண்டே போயிற்று. அதனைத் தீர்க்க முடியாததால் சுக்ரோவும் வட்டிக் கடைக்காரனுக்குச் சம்பளமில்லாத வேலை செய்ய வேண்டியதாயிற்று. இதுபோலக் கடனைத் தீர்க்க முடியாமல் வாழ்நாள் முழுவதும் பலர் அடிமைகளாக அப்பகுதியில் இருந்தனர்.



சுக்ரோவின் மகன் மாண்டியா கள்ளச் சாராயம் காய்ச்சி அதிகாரிகளிடம் அகப்பட்டான். அவன் விடுதலை பெற லஞ்சம் கொடுக்க வேண்டியதாயிற்று. அதற்கும் கடன் வாங்க அதே வட்டிக் கடைக்காரனை சுக்ரோ நாடினான். அக்கடனுக்கும் மாண்டியாவும் அந்த வட்டிக் கடைக்காரனுக்கு அடிமையாக வேண்டியதாயிற்று.

சுக்ரோவின் இரண்டு மகள்களும் கல் உடைக்கும் வேலையில் ஒரு குவாரியில் சேர்ந்தார்கள். இப்படியெல்லாம் உழைத்தாலும் கடனைத் தீர்க்க வழி இல்லை என்று சுக்ரோ கண்டு கொண்டான். அதனால் அவன் தன் நிலத்தை அந்த வட்டிக் கடைக்காரனுக்கு கொடுத்து தன் கடனை அடைத்து விட்டுத் தன் மகன்களோடு அடிமைத்தனத்திலிருந்து விடுதலையடைந்தான்.

சுக்ரோ தன் இரு மகள்களையும் தன்னோடு இருக்க அழைத்து வந்தான். அதற்கு முன் அவர்கள் தம் இஷ்டம் போல் இருக்கப் பழக்கப்பட்டு விட்டார்கள். மூத்த மகள் தன் குடிசையில் அடைந்து கிடக்காமல் வட்டிக் கடைக்காரனை அடிக்கடி ரகசியமாகச் சந்தித்து வரலானாள். இந்த விஷயம் ஒரு சில நாட்களிலேயே தெரிந்து போயிற்று. சுக்ரோவுக்குக் கோபம் வந்தாலும் அதனைத் தன் மகள்மீது காட்டாமல் அடக்கிக் கொண்டான். வட்டிக் கடைக்காரன் ஜூலியை அழைத்துக் கொண்டு பட்டணத்திற்குப் போய் விட்டான். சுக்ரோவுக்கும் அவன் மகன்களுக்கும் இது பெருத்த தலைக்குனிவாயிற்று.

சுக்ரோவும் அவன் மகன்களும் கஷ்டப்பட்டு வேலை செய்து பணம் சேர்த்தனர். தம் நிலத்தை வட்டிக் கடைக்காரனிடமிருந்து வாங்க முயன்றபோது அவன் அதைக் கொடுக்க மறுத்தான். சுக்ரோ கோராபட் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தான். வழக்கு வாய்தாக்கள் பல கண்டது. முடிவில் வட்டிக் கடைக்காரன் லஞ்சம் கொடுத்து ஒரு வாய்தாவில் சுக்ரோ நீதிமன்றத்திற்கு வராமல் செய்து வழக்கில் தீர்ப்பை தனக்குச் சாதகமாகப் பெற்று விட்டான்.

தாம் ஏமாற்றப்பட்டது கண்டு சுக்ரோவும் அவரது மகன்களும் மனம் ஒடிந்து போயினர். அவர்கள் வட்டிக் கடைக்காரனிடமே போய்க் கெஞ்சினார்கள். ஆனால் அவனோ அவர்களைத் திட்டி "மரியாதையாகப் போய் விடுங்கள். இல்லாவிட்டால் மூத்த மகளைக் கொண்டு வந்தது போல இளையவளையும் என் வீட்டிற்கே தூக்கிக் கொண்டு வந்து விடுவேன். தெரிந்ததா?" என்று மீசையை முறுக்கிக் கொண்டு கூறினான்.

அதைக் கேட்ட சுக்ரோ சட்டெனத் தன் கோடலியால் வட்டிக் கடைக்காரனின் தலையை ஒரே வெட்டில் வெட்டினான். தந்தையும் இரு மகன்களும் "நீ எங்கள் நிலத்தை அபகரித்தாலும் அதனை நீ அனுபவிக்க நாங்கள் விடவில்லை" எனக் கூறினார்கள். அதுகேட்டு வீட்டினுள்ளிருந்து ஜூலி வெளியே வந்தாள். அந்தக் காட்சியைக் கண்டு எங்கோ ஓடி விட்டாள். தந்தையும் மகன்களும் வட்டிக் கடைக்காரனின் வெட்டப்பட்ட தலையை எடுத்துக் கொண்டு காவல் நிலையத்திற்குப் போய் தாம் கொலை செய்ததாகக் கூறிச் சரண் அடைந்தார்கள்.

ஒரியா மொழியில் பிரபல எழுத்தாளராகக் கருதப்படும் கோபிநாத் மோஹந்தி *(1916-1991)* இந்த நாவலின் ஆசிரியர். சாகித்திய அகாடமியும், ஞானபீடமும் இதற்கு பரிசளித்தன. ஒரியா மொழியில் இப்பரிசுகளைப் பெற்ற முதலாவது நாவல் இதுவே.

# உங்களுக்குத் தெரியுமா?

1. இந்திரகிரி, சந்திரகிரி என்ற இருமலைகளிடையே உள்ள ஆலய நகரம் எது?
2. பாரசீகத்தை நிறுவியவர் யார்?
3. 1990 நவம்பர் 9ல் நிகழ்ந்த முக்கிய சம்பவம் என்ன?
4. சீனாவை வென்ற மங்கோலியச் சக்கரவர்த்தி யார்?
5. பங்களாதேஷ் எப்போது ஏற்பட்டது?
6. 'உடன்கட்டை ஏறுதல்' என்ற கொடிய பழக்கத்தை எதிர்த்துப் போராடிய சமூக சீர்திருத்தவாதி யார்?
7. இந்த ஆண்டு அக்டோபர் 12ல் நடந்த வரலாற்று சிறப்புமிக்க நிகழ்ச்சி எது?
8. 'மாப்ளா' என்று யாரைக் குறிப்பிடுகிறார்கள்?
9. அமெரிக்காவின் தேசியப் பறவை எது?
10. கால்கட்டை விரலில் அம்பு குத்தியதும் உயிர் விட்ட புராண புருஷர் யார்?
11. நான்கு கடல்கள் வண்ணங்களின் பெயர்களைக் கொண்டவை. அவை யாவை?
12. உலகிலேயே மிக நீளமான ரயில்பாதை எது?
13. இருமுறை 'நோபல் பரிசு' பெற்றவர் யார்?
14. மூக்குக் கண்ணாடிகளில் உபயோகிக்கப்படும் 'பை போக்கஸ்' லென்ஸைக் கண்டு பிடித்தவர் யார்?
15. யுனெஸ்கோவின் ஆதரவில் நிர்மாணிக்கப்பட்ட முதலாவது அகில உலக நகரம் எது?

## விடைகள்

1. கர்நாடகத்திலுள்ள சிரவண பெலகோலா
2. சைரஸ் சக்கரவர்த்தி
3. கிழக்கு ஜெர்மனி வீழ்ச்சி
4. குப்லாய்கான்
5. டிசம்பர் 1971
6. ராஜாராம் மோகன்ராய்
7. கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்து 500 ஆண்டுகள் நிறைவு.
8. கேரளாவில் மலபார் பகுதியில் வாழும் முஸ்லீம்கள்
9. வெண்தலைக் கழுகு
10. கிருஷ்ண பரமாத்மா
11. வெண்கடல், கருங்கடல், செங்கடல், மஞ்சள் கடல்
12. மாஸ்கோவிலிருந்து விளாடிவாஸ்டக் வரை செல்லும் ரயில்பாதை.
13. மேடம்க்யூரி
14. பெஞ்சமின் பிராங்க்லின்
15. புதுச்சேரி அருகேயுள்ள 'ஆரோவில்'



# அவளது வெற்றி!

ராமைய்யன் ஜானகி என்ற பெண்ணை மணந்து கொண்டான். அவன் வேலை பார்க்கும் ஊர் கீரனூர். அந்த ஊரில் அவன் குடியிருக்க வாடகைக்கு வீடுதேடியும் ஒரு வீடு கூட அவனுக்குக் கிடைக்கவில்லை. ஊருக்கு வெளியே ஒதுக்குப்புறமாக ஒரு அழகிய சிறு வீடு இருப்பதையும் அது பூட்டப்பட்டிருப்பதையும் கண்டு அது பற்றி விசாரித்தான்.

ஊராரும் "அதுவா! அது பிசாசு வாழும் வீடு. வெகு நாட்களுக்கு முன் செல்லப்பன் என்பவன் அந்த வீட்டைக் கட்டினான். ஆனால் அவனும் அவனது மனைவி மக்களும் ஒரு விபத்தில் மாண்டு போனார்கள். செல்லப்பன் பிசாசாக மாறி அந்த வீட்டில் திரிந்து கொண்டிருக்கிறான். அதனால் யாருமே அந்த வீட்டுப் பக்கம் போவதே இல்லை" என்றார்கள்.

அதைக் கேட்ட ராமைய்யன் "ஐயோ பிசாசு வாழும் வீடா! நமக்கு வேண்டாம்" என்றான். ஆனால் ஜானகியோ "எனக்கு இந்தப் பேய், பிசாசு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை. அப்படி அவை இருந்தாலும் நான் பயப்பட மாட்டேன் இந்த வீட்டிலேயே குடி போகலாம். இதற்கு யாரைக் கேட்க வேண்டும்?" என்று ஊராரிடம் கேட்டாள்.

ஊராரும் "யாரையும் கேட்க வேண்டியதில்லை. நீங்கள் தாராளமாக அந்த வீட்டில் வசிக்கலாம். அந்த வீட்டின் சாவியும் யாரிடமும் இல்லை. பூட்டை உடைத்துக் கொண்டுதான் உள்ளே போக வேண்டும்" என்றார்கள்.

ஜானகியும் தன் கணவனிடம் "சரி, நாம் போய் அந்த வீட்டின்

—குரு. ரம்யா—



பூட்டை உடைத்து அதில் நாம் சாமான்களை இறக்குவோம்" என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு போனாள்.

பூட்டை உடைத்துக் கொண்டு உள்ளே சென்ற இருவரும் அந்த வீட்டில் ஒரு ஒட்டடைகூட இல்லாமல் எங்கும் சுத்தமாய் இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டார்கள். எல்லா சாமான்களும் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன.

அதைக் கண்ட ஜானகி "அடேயப்பா! பிசாசு வாழும் வீடு போல இது தெரியவே இல்லையே. இங்கு வேறு யாராவது வசிக்கிறார் போலிருக்கிறதே" என்று தன் கணவனிடம் கூறினாள். அப்போது ஒரு உருவம் அவர்கள் முன் குதித்து நின்று "இங்கே வேறு யாரும் வசிக்கவில்லை. நான்தான் வசிக்கிறேன். நான் இறந்துபோன செல்லப்பன் பிசாச்சாக மாறி இங்கே திரிகிறேன். இதுதான் ஆசையாகக் கட்டின வீடு. அதனால் தான் இங்கே இருக்கிறேன்" என்றது.

ராமையனுக்கு உதறல் கண்டது. ஆனால் ஜானகியோ தைரியமாய் "இதோ பார். நாங்கள் இந்த வீட்டில்தான் இருக்கப் போகிறோம்" என்றாள். பிசாசும் "ஆகா! தாராளமாக இருந்து கொள்ளுங்கள். ஆனால் வீடு மட்டும் கண்ணாடி போல சுத்தமாக இருக்க வேண்டும். எனக்கு வீட்டில் குப்பை கூளம் என்று இருந்தால் கொஞ்சமும் பிடிக்காது. எனக்கு என்று ஒரு அறையை நான் வைத்துக் கொள்கிறேன். அதற்குள் நீங்கள் யாரும் வரக்கூடாது. நான் சொன்ன இந்த நிபந்தனைகளை மீறினால் உங்களைப் பிடித்து ஆட்டிவைப்பேன். தெரிந்ததா?" என்று எச்சரித்தது.

ராமையனும் பயந்தவாறே "நீ சொன்னபடி வீட்டைச் சுத்தமாக தூசி தும்பு இல்லாமல் வைத்துக் கொள்கிறோம். உன் அறைக்குள்ளும் வரமாட்டோம்" என்றான். ஜானகியோ பிசாசு கூறியதைக் கேட்டு ஏதோ ஒரு யோசனையில் ஆழ்ந்தாள்.

அவள்தான் கொண்டு வந்த சாமான்களை எல்லாம் மூலைக்கு மூலை பரப்பி வைத்தாள். வீட்டைச் சுற்றி வெளியே இருந்த குப்பை கூளங்களை அந்த வீட்டின் பின் புறம் குவிக்கலானள். அது ஒரு வாரத்தில் ஒரு சிறு குன்று போலாகி விட்டது. அதில் அழுகிப் போன காய்கறிகள் பழத்தோல்கள் என்று சேர்ந்து ஒரேயடியாக வீடு முழுவதும் நாற்றம் அடித்தது.

ராமய்யனும் தன் மனைவியிடம் "சாமான்களை இப்படிப் பரப்பிப் போட்டிருக்கிறாயே. ஒழுங்காக எடுத்து வைத்து வீட்டை பெருக்கித் துடைத்து சுத்தம் செய்யக் கூடாதா? வீட்டின் பின்புறம் குப்பையை மலை போலச் சேர்த்து வைத்து வீட்டில் ஒரே நாற்றம் அடிக்கச் செய்து விட்டாயே. பிசாசு எச்சரித்தது நினைவில் இல்லையா?" என்று கேட்டான்.

ஜானகியும் "எல்லாம் ஞாபகம் இருக்கிறது. எல்லா சாமான்களையும் எடுத்து வைக்க சோம்பலாக இருக்கிறது. தினமும் ஒன்று இரண்டு என்று சரிப்படுத்துகிறேன். குப்பை சேர்ந்து விட்டால் நாற்றம் அடிக்கத்தான் செய்யும். அது நன்றாக உலர்ந்தபின் எரித்தால் சரியாகி விடும்' என்றாள்.

அப்போது பிசாசு அவர்கள் முன் வந்து "நானும் போகட்டும், பொறுத்துப் பார்க்கலாம், என்று



இந்த ஒரு வாரம் பொறுமையாக இருந்து விட்டேன். நீங்கள் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. இந்த வீட்டின் பின்புறம் குப்பையைக் குவித்து ஒரே நாற்றம் அடிக்கச் செய்து விட்டீர்கள். இந்த வீட்டைக் கட்ட நான் சம்பாதித்ததை எல்லாம் செலவு செய்தேன். வீடு அழகாக இருக்க வேண்டும் என்பதே என் ஆசை. இந்த வீட்டில் இருக்க வேண்டுமானால் என் நிபந்தனைகளின் படித்தான் நடக்க வேண்டும் என்று கூறினேன். அதன்படியும் நடக்காமல் வீட்டை நாறடித்து விட்டீர்கள். இப்போதே உங்களைக் கொல்லப் போகிறேன்" என்று ஜானகியை

அணுகியது.

அதைக் கேட்டு ஜானகி பயந்து விடவில்லை. மூலையில் இருந்து துடப்பத்தைக் கையில் எடுத்துக் கொண்டு "பிசாசுகளால் மனிதர்களை பயமுறுத்தத்தான் முடியும். அவர்களைக் கொல்லும் சக்தி அவற்றிற்கு இல்லை என்பதை நான் அறிவேன்" எனக் கூறி ஓங்கினாள்.

பிசாசு பயந்து "வேண்டாம் நான் என் அறைக்குப் போய்விடுகிறேன்" என்று அலறியது. ஜானகியும் "உன் அறைக்கா! உன் அறையை என்ன செய்கிறேன் பார்" என்று கூறி வீட்டின் பின்புறம் குவிக்கப்பட குப்பையை அள்ளி எடுத்து வந்து அதன் அறையில் போட்டாள்.

அதைக் கண்ட பிசாசு "அம்மா! தாயே! இந்தக் குப்பை கூளத்திற்கு நடுவே நாற்றம் அடிக்கும் இந்த வீட்டில் நான் இனி இருக்க முடியாது. இது என் வீடு என்ற ஆசையே எனக்கு இல்லாமல் போய்விட்டது. நீ இந்த வீட்டை வைத்திருக்கும் லட்சணத்தைப் பார்த்தால் எனக்கு வீட்டின் மீதுள்ள ஆசையே போய் விட்டது. நான் ஏதாவது ஒரு காட்டிற்குப் போய் ஒரு மரத்தில் வசிக்கிறேன். போகு முன் ஒரு அறிவுரை. நீ வீட்டை சுத்தமாக வைத்துக் கொள்ளக் கொஞ்சம் கற்றுக்கொள்" என்று கூறிவிட்டுப் போய்விட்டது.

அது போனபின் ஜானகி "இனி அந்தப் பிசாசு இந்தப் பக்கம் தலை காட்டாது. இனிமேல் வீட்டைச் சுத்தப்படுத்தி சாமான்களை ஒழுங்காக வைக்கிறேன். குப்பையை எரித்து விடுகிறேன். என்று பரபரப்புடன் வேலை செய்யலானாள். ராமையனும் அவளை ஆச்சரியத்துடன் பார்த்து "இவ்வளவும் அந்தப் பிசாசைச் விரட்டவா செய்தாய்! முடிவில் வெற்றி உனக்குத்தான்" என்றான் மகிழ்ச்சி ததும்ப.





# பிரத்தியார் பேச்சு

குருசாமி ஒருநாள் காலை தெருவில் வேகமாகச் சென்று கொண்டிருந்த அவ்வூர் மணியகாரரர் மன்னாரை நிறுத்தி "உங்களிடம் ஒரு விஷயம் கேட்கிறேன். கிழக்குத் தெரு கனபதி எப்படிப்பட்டவர்? நாணயஸ்தரா?" என்று கேட்டான். மன்னாரும் அவனை ஏற இறங்கப் பார்த்து "ஏன் கேட்கிறாய்?" என்று கேட்டார்.

அதற்கு குருசாமி "அவர் என்னிடம் கொஞ்சம் பணம் கடன் கேட்டார். இரண்டு நாள் கழித்து வந்து பார்க்கும்படிச் சொல்லி அனுப்பினேன். நானே இந்த ஊருக்குப் புதுசு. உங்களைப் போன்ற பெரிய மனிதர்களிடம் கேட்டுவிட்டு அவருக்குக் கடன் கொடுக்கலாம் என நினைத்தேன்" என்றான்.

மன்னாரும் "நல்ல வேளை! கடன் கொடுக்குமுன் கேட்டாயே. கணபதிதானே! மகா அயோக்கியன். சொன்ன சொல்லைக் காப்பாற்ற மாட்டான். ஒரு பைசாக் கூட அவனுக்குக் கடனாகக் கொடுக்காதே. கொடுத்தால் பணம் திரும்பக் கிடைக்காது. தெரிந்ததா?" என்று கூறிவிட்டுச் சென்றார்.

குருசாமியும் தன் மனதில் "ஆமாம். இவர் சொல்வது சரியாகத்தான் இருக்கும். நான் இந்த ஊருக்குக் குடிவந்து ஆறுமாதம் தானே ஆகிறது. யார் எப்படிப் பட்டவர் என்பதை நர்லு பேரிடம் விசாரித்தால்தானே தெரியும் கணபதி பணத்திற்காக வந்தால் இன்னும் இரண்டு நாள் கழித்து வரும்படி சொல்லி அனுப்பி விடுகிறேன். அதற்குள் இன்னும் யாரிடமாவது அவனைப் பற்றி விசாரிக்

–ரேணுகா ரவி–

கலாம்'' என எண்ணினான்.

அதற்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு கணபதி குருசாமியிடம் வந்து கடன் கேட்டான். அப்போது குருசாமி "நான் எதிர்பார்த்த இடத்திலிருந்து எனக்கு வரவேண்டிய பணம் இன்னமும் வரவில்லையே'' என்றான்.

அதைக் கேட்ட கணபதி "நான் உங்களை தான் மலைபோல நம்பி வந்திருக்கிறேன். எனக்கு இப்போது பணம் அவசரமாகத் தேவைப்படுகிறது. என் மனைவிக்கு உடல் நலம் சரியில்லை. அவளைப் பட்டணத்தில் உள்ள மருத்துவமனைக்கு கூட்டிப் போய் வைத்தியம் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் அவள் பிழைக்க மாட்டாள். எனவே எனக்குப் பணம் கொடுங்கள். வட்டியும் முதலுமாக அடுத்த மாதமே உங்களுக்குத் திருப்பித் தந்து விடுகிறேன். நான் மிகுந்த நாணயஸ்தன். சொன்ன சொல் தவறாதவன். என்னைப் பற்றி ஊரில் விசாரித்துப் பாருங்கள் அப்போது நான் சொல்வது உண்மை என்று உங்களுக்குத் தெரியவரும்'' என்றான்.

குருசாமியும் "சரி பார்க்கலாம். நாளை மறுநாள் வந்து பாருங்கள்'' என்று கூறி அவனை அனுப்பினான். அவன் போனதும் குருசாமி தன் வீட்டிலிருந்து கிளம்பி இன்னும் யாரிடமாவது கணபதியைப் பற்றிக் கேட்கலாம் என எண்ணியவாறே நடந்தான். அப்



போது கோவில் பூஜை செய்யும் ராமசாமி குருக்கள் அவன் எதிரே வந்து கொண்டிருந்தார்.

குருசாமி அவரை வணங்கி "ஐயா! ஒரு நிமிஷம். நீங்கள் இந்த ஊரில் ஒரு பெரிய மனிதர் கிழக்குத் தெரு கணபதி எப்படிப்பட்டவர்? அவர் என்னிடம் பணம் கடன் கேட்டார். கொடுக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் மணியகாரரர் மன்னாரோ 'அவர் சொன்ன சொல்லைக் காக்க மாட்டார். பைசா கொடுக்காதே. கொடுத்தால் திரும்பிவராது' என்கிறாரே இது உண்மையா?" என்று கேட்டான்.

குருக்களும் "ரத்தினச் சுருக்கமாய்ச் சொல்கிறேன். பிறத்தியார் பேச்சை நம்பினால் நஷ்டமே ஏற்படும்" என்று கூறிக்கொண்டே போய் விட்டார். குருசாமியும் அதைக் கேட்டுத் திருப்தி அடைந்தவனாய்த் தன் வீட்டிற்கு வந்தான். இரண்டு நாட்கள் கழிந்ததும் கணபதி வரவே, அவனும் கணபதி கேட்ட தொகையைக் கடனாகக் கொடுத்து அனுப்பினான்.

மூன்று மாதங்களாகியும் வாங்கின கடனைக் கொடுக்க வராத கணபதியைக் காண குருசாமி அவனது வீடுதேடிச் சென்றான். அவனைக் கண்ட கணபதியோ "கவலைப்படாதீர்கள். அடுத்த மாதம் கொடுத்து விடுகிறேன். நான் ஒன்றும் ஊரை விட்டு ஓடவில்லையே" என்றான். குருசாமி



மேலும் ஒரு மாதம் அல்ல. இரண்டு மாதங்கள் பொறுத்துப் பார்த்தான். கணபதியோ அவனைத் தெருவில் பார்த்ததும் பாராதவன் போல முகத்தைத் திருப்பிக் கொண்டு போகலானான்.

இதைக் கண்டு குருசாமி மனம் நொந்து கோவிலுக்குப் போய் குருக்களிடம் கணபதியைப் பற்றிக் கூறி "அன்று நீங்கள் சொன்ன படி நடந்ததால் இப்படி ஆயிற்று" என்று அங்கலாய்த்துக் கொண்டான். குருக்களும் "நான் சொன்னேனா! என்ன அப்படிச் சொன்னேன்" என்று கேட்டார்.

குருசாமியும் "இந்த கணபதியைப் பற்றித் தங்களிடம் கேட்ட போது மணியகாரரர் மன்னார் கணபதியை நம்பக் கூடாது என்று கூறியதையும் சொன்னேன். அப்போது நீங்கள் பிறத்தியார் பேச்சைக் கேட்டால் நஷ்டம் தான் என்று கூறினீர்கள். அதனால் மணியகாரரின் பேச்சைக் கேட்டு நடந்தால் எனக்கு வரப்போகும் வட்டி நஷ்டமே என நினைத்து உங்களது அறிவுரைப்படி கணபதிக்கு கடன் கொடுத்தேன். இப்போது பாருங்கள் உங்கள் அறிவுரைப்படி நடந்ததால் எனக்கு வட்டி மட்டும் அல்ல அசலே வராது போயிற்றே" என்றான்.

குருக்களும் "நான் சொன்னதை நீங்கள் சரியாக புரிந்து கொள்ள வில்லை. பிறத்தியார் என்றால் மணியகாரரர் மன்னார் மட்டும் அல்ல, நானும் அதில் அடக்கம் தானே. என் பேச்சையும் நீங்கள் கேட்காமல் நீங்களே சுயமாக ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும்" என்றார்.

அப்போது தான் குருக்கள் சொன்னதற்கு முழு அர்த்தம் குருசாமிக்குப் புரிந்தது அவன் குருக்களிடம் விடை பெற்றுக் கொண்டு இனி கணபதியிடமிருந்து கடனை எப்படி வசூலிப்பது என்று யோசித்தவாறே வீட்டிற்குச் சென்றான்.






இராவணன் லங்கா யாகம் செய்கிறான் என்பது விபீஷணனுக்குத் தெரிந்து போயிற்று. அவன் ராமரிடம் "இந்த யாகத்தை முடிக்க விடக் கூடாது. இராவணன் மட்டும் இந்த யாகத்தைச் செய்து முடித்தால் அதிலிருந்து இரும்பு உடல் கொண்ட வீரர்களும், யானை, தேர், குதிரைப் படைகளும் வெளி வந்து அவனது பலத்தை அதிகரித்து விடும். அதன் பிறகு அவனை வெல்ல முடியாது. அதனால் அந்த யாகத்தை பாதியில் நிறுத்தி அழிக்க வேண்டும்" என்றான்.

அப்போது ஜாம்பவான் "அங்கதனுக்கு அதிருஸ்யகரணி என்ற மந்திரம் தெரியும். அதைக் கொண்டு அவன் யார் கண்ணிலும் படாமல் சென்று இராவணனின் யாகத்தை அவன் அழித்து விடலாம்" என்றான்.

அதுகேட்டு அங்கதன் இராவணனின் அந்தப்புரத்தில் நுழைந்து மண்டோதரிக்குக் கோபம் மூட்டி அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டு இராவணன் யாகம் செய்யும் இடத்திற்குச் சென்றான். அப்போதும் இராவணன் யாகத்தை நிறுத்திவிட்டு தன் மனைவியைக் காப்பாற்ற வரவில்லை. அப்போது அங்கதன் மண்டோதரியை அங்கிருந்து இழுத்துச் செல்லலானான்.

அப்போது மண்டோதரி "மூவுலகையும் வென்றவரின் மனைவியான என்னை இப்போது காப்



பாற்ற யாருமே இல்லையா?'' என்று கதறினாள். அதைக் கேட்ட இராவணன் யாகத்தைப் பாதியில் நிறுத்திவிட்டு எழுந்து ஓடி வந் தான். அப்போது அங்கதன் மண் டோதரியை விட்டு விட்டுப் போய்விட்டான். மண்டோதரி யும் இராவணனிடம் ''இப்போதா வது சீதையை இராமரிடம் ஒப் படைத்துப் போரை நிறுத்தி விடுங் கள்'' என்றாள். இராவணனோ என்ன செய்வது என்று தோன்றா மல் அங்கிருந்து கால்போன போக் கில் போகலானான்.

இலங்கையில் நிலை இப்படி இருக்க, லங்கைக்கு அடியே பல்லா யிரம் யோசனை தூரத்தில் உள்ள பாதாள லோகத்தில் வேறொரு விதமான நிகழ்ச்சி நடந்து கொண் டிருந்தது. அந்த உலகின் அதிபன் மயில் ராவணன். அவன் மந்திர சக்திகள் கொண்டவன். மாயவித் தைகள் கற்றவன். அவனுடைய அண்ணன் அகிராவணன்.

மயில் ராவணன் நாகலோகத் திலிருந்து வாசுகியின் மகளான சந்திர சேனையைக் கவர்ந்து வந்து சிறை வைத்திருந்தான். சந்திர சேனை மிக அழகானவள். அவள் இராமரையே மணக்க விரும்பி னாள். அதனால் அதனை மயில் ராவணனிடம் கூறி அவனது ஆசை நிறைவேறாது என்றும் சொல்லி விட்டாள். சீதையின் சுயம்வரத் தைக் காண நாகர்களுடன் சென்ற அவள் அங்கு இராமரைக் கண்டு அவரையே தான் மணப்பது எனத் தன் மனதில் தீர்மானித்துக் கொண் டாள். அவரது உருவச் சிலை யைத் தன்னோடு வைத்து பூசித்தும் வந்தாள்.

மண்டோதரியை விட்டுக் குழம் பிய மனதோடு சென்ற இராவணன் மேற்கு திக்கில் சென்று ஓரிடத் தில் தர்ப்பைப் புல்லைப் பரப்பி அதன் மீதுப் படுத்துக் கொண்டு என்ன செய்யலாம் என யோசிக் கலானான்.

அப்போது அங்கு நாரதர் வந் தார். அவர் அவனைப் பார்த்து ''என்ன இராவணா? ஏன் இப்படிக்



கதி கலங்கிப் போயிருக்கிறாய். உனக்கா உதவுபவர்கர்கள் இல்லை? உன் நண்பனும், உன் உடன் பிறந்தவன் போல இருக்கும் மயில் ராவணனை நீ மறந்து விட்டாயா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்டதும் இராவணன் புத்துயிர் பெற்றவன் போல உற்சாகம் அடைந்தான். உடனே அவன் நாரதருக்கு நன்றி கூறி அவரை அனுப்பி விட்டு ஓரிடத்தில் உட்கார்ந்து மயில் ராவணனை நினைத்தான். அந்த சமயத்தில் மயில் ராவணன் சந்திர சேனையிடம் பேசிக் கொண்டிருந்தான். அவன் தன்னை அவள் மணந்து கொள்ள வேண்டும் என வற்புறுத்தினான். அவளோ தான் பூசித்து வரும் இராமரின் விக்கிரகத்தைக் காட்டி "உன்னைக் கொல்லப் போகிறவர் இந்த இராமர்தான்'' என்றாள்.

அதைக் கேட்டு அவன் அட்டகாசமாகச் சிரித்து "என்னை இந்த ராமன் அல்ல வேறு யாராலுமே கொல்ல முடியாது. இங்கிருந்து ஆயிரம் யோசனை தூரத்தில் உள்ள ஒரு பயங்கர குகையில் ஒரு ரத்தினப் பேழைக்குள் ஐந்து வண்டுகள் உள்ளன. அவற்றை ஒரே சமயத்தில் நசுக்கிக் கொன்றாலே என் உயிர் போகும். அந்த குகையைப் பயங்கரப் பிசாசுகள் காத்து வருகின்றன. எனவே யாரும் அந்தக் குகைக்குள் போகவே முடியாது. தெரிந்ததா? உன் ராமனா என்னைக் கொல்லப் போகிறான்?'' என்று கூறி அவன் பூசையில் வைத்திருந்த இராமரின் விக்கிரகத்தை எடுத்து ஓங்கித் தரைமீது அடித்தான் அது சுக்கல் சுக்கலாக உடைந்து சிதறியது.

இந்த நிலையில்தான் இராவணன் மயில் ராவணனை எண்ணினான். அது தெரிந்ததும் உடனே மயில் ராவணன் அங்கிருந்து போய் பூமியைப் பிளந்து கொண்டு ராவணன் முன் போய் நின்றான். இராவணன் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு தன் எதிரியான இராமரைப் பற்றி அவனிடம் விவரமாகக் கூறினான்.



அப்போது மயில் ராவணன் "நீ கவலைப்படாதே. அந்த இராமனையும் இலட்சுமணனையும் தூக்கி வந்து பாதாள லோகத்தில் சிறைப்படுத்தி விடுகிறேன்" என்றான்.

இந்த சமாசாரம் ஒற்றர்கள் வாயிலாக விபீஷணனுக்குத் தெரிந்து விட்டது. அப்போது இரவாகி விட்டதால் இராமரும் இலட்சுமணனும் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அதனால் விபீஷணன் வானரப் பிரமுகர்களிடம் "மயில் ராவணன் இராமரையும் இலட்சுமணனையும் கவர்ந்து செல்லாமல் காக்க வேண்டும்" என்றான்.

அனுமார் உடனே தன் வாலை இராமரும் இலட்சுமணனும் படுத்திருக்கும் இடத்தைச் சுற்றி வைத்து சுவர் போல அடுக்காக உயரமாகும்படிச் செய்தார். அது ஒரு சிறு கோட்டை போலகியது. அனுமார் அந்தச் சுருள்மீது அமர்ந்து இனி யாராலும் அவர்களைக் கவர்ந்து செல்ல முடியாது என்று எண்ணித் திருப்தி அடைந்தார்.

சற்று நேரத்திற்குப்பின் விபீஷணன் வருவதை அனுமார் பார்த்தார். விபீஷணனும் அவர் காவல் காப்பதைப் பாராட்டி "நான் உங்கள் கோட்டைக்குள் போய் இராமருக்கும் இலட்சுமணனுக்கும் இந்த ரட்சைகளைக் கட்டிவிட்டு வருகிறேன். இது மயில் ராவணனது சக்தியை முறித்து விடும்" என்றான். அனுமாரும் விபீஷணனை உள்ளே போகச் சொன்னார்.

விபீஷணனும் உள்ளே போய் விட்டு வெளியே வந்து "அனுமாரே! எச்சரிக்கையாக இருங்கள். அந்த மாயாவி மயில் ராவணன் என் உருவில் வந்து உங்களை ஏமாற்றி இவர்களை தூக்கிக் கொண்டு போய்விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறி விட்டுச் சென்றான். அவன் கூறிய படியே சற்று நேரத்திற்குப் பின் விபீஷணன் மீண்டும் வந்தது கண்டு அனுமார் அவனைப் பிடித்துக் கொண்டு "அடே மயில்

ராவணா! என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்? உன்னை இப்போதே கழுத்தை நெரித்துக் கொன்று விடுகிறேன் பார்'' என்றார்.

அதைக் கேட்டு விபீஷணன் ''அனுமாரே! இதென்ன? இதற்கு முன் மயில் ராவணன் என் உருவில் இங்கு வந்து உங்களை ஏமாற்றி விட்டானா? இராமரும் இலட்சு மணனும் பத்திரமாகத்தானே இருக்கிறார்கள்?'' என்று கேட் டான். உடனே அனுமார் தம்வால் சுருளினுள் பார்த்தார். அங்கு இராமரும் இலட்சுமணனும் இருக்க வில்லை.



அனுமார் கைகளைப் பிசைந்து கொண்டு ''ஐயோ! மோசம் போனேனே!'' எனக் கண்ணீர் வடித்தார். அப்போது ஜாம்பவான் ''கண்ணீர் வடித்துக் கால தாமதம் செய்ய வேண்டாம். உடனே அவர் களைத் தேடி விடுவித்துக் கொண்டு வர வேண்டும்'' என்றான். அனு மாரும் விபீஷணனிடம் பாதாள லோகத்திற்குச் செல்லும் வழியைக் கேட்டு அறிந்து கொண்டு தம் உடலைப் பெரிதாக்கிக் கொண்டு ஆகாய வழியே சென்றார்.

விபீஷணனாக உருமாறி வந்த மயில் ராவணன் இராமரையும் இலட்சுமணனையும் சிறு பொம் மைகளாக்கித் தன் மேலாடையில் மறைத்து எடுத்துக் கொண்டு சென் றான். பாதாள லோகத்தை அடைந் ததும் அவன் அவற்றைச் சந்திர சேனையிடம் காட்டி ''இதோ பார் உன் இராமன். அவன் பக்கம் இருப்பது அவன் தம்பி இலட்சு மணன். அவர்களை நாளை காளி தேவிக்கு பலி கொடுத்து விட்டு உன்னை நான் மணந்து கொள்ளப் போகிறேன்'' என்று கூறி பல மாகச் சிரித்து இராமரையும் இலட் சுமணனையும் கட்டி வைத்தான்.

அனுமார் மேற்கு திசையில் போய் கடலின் நடுவே பளபள வென மின்னும் தாமரை மொட்டு போன்ற மலையைப் பார்த்தார். அவர் அதன் உச்சியில் இறங்கி அதிலுள்ள சிறு துவாரம் வழியைப் பார்த்தார். அவர் தம் உடலை மிக



வும் சிறிய தாக்கிக் கொண்டு அதன் வழியே சென்று பாதாள லோகத்தின் தலைவாசலை அடைந் தார்.

தலைவாசலில் மிகவும் பல சாலியான ஒரு இளைஞன் காவல் காத்துக் கொண்டிருந்தான். அவ னைப் பார்த்ததுமே அனுமார் மனதில் ஒரு வித்ப் பாசம் ஏற்பட் டது. அவர் சிறிய உருவில் அந்த வாசலில் நுழைய முயன்ற போது அவன் அவரைக் கண்டு பிடித்துத் தடுத்து நிறுத்தி "யார் நீ? எப்படி நீ இதைக் கடக்க முயலலாம்?" எனக்கூறி பலமாக ஒரு குத்து விட் டான்.

அவனது பலத்தைக் கண்டு ஆச்சரியப்பட்ட அனுமார் "நீ யாரென்பது எனக்குத் தெரியாத போதிலும் எனக்குச் சமமாக பலம் பெற்றிருக்கிறாயே" என்று கேட் டார். அவனும் "நீ எனக்குச் சமமா? நான் யார் தெரியுமா? என் பெயர் மச்சவல்லபன். என் தந்தை மாபெரும் வீரர் அனுமார்" என்றான்.

அதைக் கேட்டு அனுமார் திடுக் கிட்டு ஆச்சரியம் அடைந்தார். அவர் கோபத்தோடு "அடே சிறு பயலே! அனுமார் பிரம்மசாரி என் பது உலகம் முழுவதும் அறியும். அவர் எப்படி உன் தகப்பனார் ஆவார்? ஏன் இந்த ஜம்பப் பேச்சு?" என்று கூறியவாறே அவனைப் பலமாக அறைந்தார். அந்த பலமான அறை வாங்கிய மச்ச வல்லபன் வலி தாங்க முடி யாமல் தன் கன்னத்தைத் தடவிக் கொண்டிருந்தபோது அவன் பின் னாலிருந்து ஒரு குரல் "இவன் கூறியது உண்மையே. அதற்காகத் தாங்கள் இவனைக் கொன்று விடா தீர்கள்" என்றது.

அனுமார் திரும்பிப் பார்த்தார். அழகிய பெண் ஒருத்தி ஓடி வந்து அவரருகே நின்றாள். அவர் அவ ளைப் பார்க்கவே அவளும் அவ ரது கால்களில் விழுந்து வணங்கி "என் பெயர் சுவர்ச்சலா. தென் கடல் அதிபர் என் தந்தை. நான் ஆயிரக்கணக்கான நீர்வாழ் உயி

ரினங்களின் அரசி. என்னைத் தாங்கள் அறியாத போதிலும் நான் தங்களை அறிவேன்'' என்றாள்.

அனுமார் "அது எப்படி?'' என்று கேட்கவே அவளும் "தாங்கள் கடலைத் தாண்டி இலங்கைக்கு போய்க் கொண்டிருக்கும் போது சிம்மிகை என்ற தங்கள் நிழலைப் பிடித்துத் தங்களைத் தடுத்தாள். தாங்கள் அவளோடு சண்டை போட்டபோது தங்கள் உடலில் பெருகிய வியர்வை கடலில் விழ அப்போது மீன் வடிவில் அங்கே இருந்த நான் அதனை விழுங்கி விட்டேன். அதனால் நான் கர்ப்பமுற்றேன். என் கர்ப்பத்திலிருந்து பிறந்தவன்தான் இந்த மச்சவல்லபன். அதனால் இவன் தங்களது மகனே'' என்றாள்.

அப்போது ஒரு அசரீரியும் "அனுமாரே! சுவர்ச்சலா கூறியது உண்மையே. மச்சவல்லபன் உன் மகனே'' என்றது. அது கேட்டு மச்சுவல்லபன் அனுமாரின் கால்களில் விழுந்து வணங்கினான். அனுமார் அவனைத் தூக்கி நிறுத்திக் கட்டித் தழுவிக் கொண்டார்.

அப்போது சுவர்ச்சலா "இவனை மயில் ராவணன் தன் அடிமையாக்கிக் கொண்டான். இவனுக்குத் தங்கள் தரிசனம் கிட்டியதும் இவனது அடிமைத்தனம் போய் விடும் என ஒரு அசரீரவாக்கு கூறியது. இன்றோடு இவன் சுதந்திர புருஷனாகி விட்டான்'' என்றாள்.

பிறகு அவள் அனுமார் வந்த காரணத்தைக் கேட்டறிந்து "தாங்கள் சந்திர சேனையைக் கண்டு மயில் ராவணனின் உயிரின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். இராமபக்தையான அவள் உங்களுக்கு உதவிபுரிவாள்'' எனக்கூறி அனுமாரை வணங்கி விட்டு மச்சவல்லபனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு சென்றாள்.






# பகலில் தெரியாதே!

வெகு காலத்திற்கு முன் பாக்தாதில் அகமது என்ற பணக்காரன் இருந்தான். அவன் பேய் பிசாசுக் கதைகளை ஆவலுடன் கேட்பவன். தான் அக்கதைகளைக் கேட்டு மகிழ்ந்தால் கதை சொன்னவனுக்குப் பரிசு கொடுப்பான். கதை பிடிக்காவிட்டால் கதை சொன்னவனுக்குச் சவுக்கால் அடிகள் கொடுத்து விரட்டிவிடுவான். பரிசுக்காக ஆசைப்பட்டு வந்தவர்களில் பெரும்பாலோர் சவுக்கு அடிகள் வாங்கிக் கொண்டுதான் போனார்கள்.

இதனால் பேய் பிசாசுக் கதைகள் கூறி அகமதைத் தேடி வருபவர் இல்லாது போயினர். அகமது கூட யாராவது கதை சொல்ல வருவானா என எதிர்பார்த்து ஏங்கலானான். ஒரு நாள் மத்தியான்னம் அவன் சாப்பிட்டு விட்டுச் சற்றுக் கண்ணயர்ந்தான். அப்போது அவனது வேலையாட்கள் ஒருவனை அழைத்துக் கொண்டு வந்து அவன் முன் நிறுத்தினார்கள். அகமது கண் விழித்துப் பார்த்தான். அந்த மனிதன் பார்க்க விசித்திரமாக இருந்தான். அவன் அணிந்திருந்த ஆடைகள் அழுக்கேறி இருந்தன. ஒல்லியாக ஈர்க்குச்சி போல இருந்தான்.

அகமது அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு "உன்னைப் பார்த்தாலே பேய் போலிருக்கிறதே. நீயா பேய்க் கதை சொல்லப் போகிறாய்?" என்றான்.

அதற்கு அந்த மனிதனும் "ஐயா! என் பெயர் கரீம். என் மனைவி கூட உங்களைப் போலவே பேய் பிசாசுக் கதை ஆவலுடன் கேட்பாள். ஒரு நாளிரவு அவளுக்கு நான் ஒரு பயங்கரப் பேய்க்கதை

—எஸ். சோபினி—

யைக் கூறினேன். நான் கதையை முடித்த போது அவள் மாரடைப் பால் இறந்து விட்டாள். மறுநாள் காலை அவளைப் புதைத்து விட்டு வீட்டிற்கு வந்து ஓரிடத்தில் உட் கார்ந்து துக்கம் தாங்க முடியாமல் கண்ணீர் உகுக்கலானேன். அப் போது என் முன் ஒரு மின்னல் வெட்டியது. மறுநிமிடமே என் மனைவி என் முன் தோன்றினாள். பூமிக்குள் புதைக்கப்பட்டவள் எப் படி வெளியே வந்தாள் என்று நான் ஆச்சரியப் படலானேன்'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

அப்போது என் மனைவி "நீங் கள் மறுத்தும் உங்களைப் பேய்க் கதை கூறும்படி நான் வற்புறுத் தினேன். அதற்கான தண்டனை எனக்குக் கிடைத்துவிட்டது. உங் களை விட்டே பிரிந்து விட்டேன். என்னை மன்னியுங்கள்'' என்றாள்.

கரீம் இதனைக் கூறிச் சற்று நிறுத்தவே அகமதும் "சரி இது ஒன்றும் அதிசயம் இல்லையே'' எனவே கரீமும் "அதிசயம் இல் லையா? பேய் பகலில் தென்படு வது அதிசயம் தானே'' என்றான். அதுகேட்டு அகமது தன் தாடியை உருவிக் கொண்டு "நீ சொல் வதை நான் நம்பமாட்டேன். பேய் பகலில் தென்படாது'' என்றான்.

உடனே கரீம் "ஏன் தென் படாது? ஒரு மாதத்திற்கு முன் பரி சுக்கு ஆசைப்பட்டு உங்களுக்குப் பேய்க்கதை சொல்ல நான் வந் தேன். என் கதை திருப்தி அளிக்க வில்லை என்று கூறி என்னைச் சவுக்கால் 'அடி அடி' என்று அடித் தீர்கள். உங்கள் வீட்டை விட்டு வெளியே போனதுமே நான் இறந்து விட்டேன்'' என்று கூறித் தன் தலையை எடுத்துப் பந்து போல வீசிப் பிடித்தான்.

அது கண்டு அகமது 'ஓ' வென அலறி கீழே விழுந்தான். அதன் பிறகு அவன் யாராவது பேய் என்ற வார்த்தையைச் சொன்னாலே அங்கிருந்து ஓடி மறையலானான்!





# மருமகள் யுக்தி

சீதாலட்சுமி தன் ஒரே மகனான சுந்தரத்தை தன் கணவன் இறந்த பின் வளர்த்துப் பெரியவனாக்கினாள். அவள் தன் அண்ணனின் மகள் நீலாவைத் தன் மகனுக்கு கல்யாணம் செய்து வைக்க விரும்பினாள். ஆனால் சுந்தரமோ தன் ஊரிலுள்ள பிரேமா என்ற பணக்கார வீட்டுப் பெண்ணை மணக்க விரும்பினான். பிரேமாவும் சுந்தரத்தையே மணக்க ஆசை கொண்டாள்.

சீதாலட்சுமிக்கு அவர்கள் மணம் செய்து கொள்வது பிடிக்கவில்லை. அதனால் அவள் பிரேமாவின் வீட்டிற்குப் போய் அவளைக் கண்டு "இதோ பார்! நீ பணக்கார வீட்டுப் பெண். என் மகனைக் கல்யாணம் செய்து கொண்டு அவனை உன் வீட்டோடு வைத்துக் கொண்டு விடலாம் என்று நினைக்கிறயா? நீ என் மகனைக் கல்யாணம் செய்து கொள்வதானால் நீ என் வீட்டில் வந்துதான் இருக்க வேண்டும். உன் பிறந்த வீட்டிலிருந்து ஒரு பைசாக்கூட கொண்டு வரக் கூடாது. என் வீட்டில் வேலைகளை எல்லாம் செய்ய வேண்டும். இதற்கு ஒப்புக் கொண்டால் உன் கல்யாணத்திற்குச் சம்மதிக்கிறேன். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டாள்.

பிரேமாவும் "சரி அத்தை. நீங்கள் சொன்னதை ஏற்கிறேன்" என்றாள். அதன் பின் சீதாலட்சுமி வீட்டிற்குப் போய் சுந்தரத்திடம் தான் பிரேமாவுக்கு விதித்த நிபந்தனைகளைக் கூறினாள். சுந்தரமும் "சரி, இனிமேல் எங்கள் கல்யாணத்தை நடத்தி வை" என்றான். விரைவில் சுந்தரத்திற்கும் பிரேமாவுக்கும் திருமணம் நடை

—எஸ். வெங்கட்ராமன்—



றான். அதனால் சீதாலட்சுமி எதுவும் பேசமுடியாது போயிற்று.

பிரேமா வந்தது முதல் வீட்டுப் பாத்திரங்கள் நன்கு தேய்க்கப்பட்டு பளிச்சென்று மின்னின. வீடு சுத்தமாகப் பெருக்கப்பட்டு நன்கு துடைக்கப்பட்டது. சாமான்களெல்லாம் அது அது இருக்க வேண்டிய இடத்தில் கச்சிதமாக வைக்கப்பட்டிருந்தன. வாய்க்கு ருசியான உணவும் எல்லோருக்கும் கிடைத்தது. சீதாலட்சுமி தன் மருமகளைப் புகழ்ந்து "பேஷ்! நீ இவ்வளவு நன்றாக வீட்டு வேலைகளைச் செய்வாய் என்றும் ருசியாகச் சமைப்பாய் என்றும் நான் நினைக்கவே இல்லை. பணக்கார வீட்டுப் பெண்ணாயிற்றே இதெல்லாம் தெரிந்திருக்காது என்று நினைத்தேன். நீயோ கெட்டிக்காரியாக இருக்கிறாய். உன்னை எனக்கு ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது" என்று கூறிப் பாராட்டினாள்.

இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் சீதாலட்சுமியின் அண்ணன் நாகப்பன் தன் தங்கையைக் காண வந்தான்.

அப்போது சீதாலட்சுமி "அண்ணா! என் மருமகள் பணக்கார வீட்டில் பிறந்து வளர்ந்திருந்தாலும் அங்கிருந்து ஒரு பைசா கூடக் கொண்டு வரவில்லை. இங்கு வீட்டு வேலை, சமையல்

பெற்றது.

பிரேமா வீட்டிற்குள் அடி எடுத்து வைத்ததுமே சீதாலட்சுமி "நான் சொன்னபடி இங்கு வேலைகளை எல்லாம் நீதான் செய்ய வேண்டும்" என நினைவுபடுத்தினாள். பிரேமாவும் "ஓ! செய்கிறேன். ஆனால் நான் வேலை செய்வதை யாருமே பார்க்கக் கூடாது. கதவை மூடிக்கொண்டு தான் செய்வேன்" என்றாள்.

சீதாலட்சுமி ஏதோ சொல்ல முயன்றபோது சுந்தரம் குறுக்கிட்டு "அவள்தான் வேலைகளைச் செய்வதாகக் கூறுகிறாளே. கதவை மூடிக்கொண்டு செய்வதால் என்ன குறைந்துவிடப் போகிறது?" என்

எல்லாம் அவ்ளே செய்கிறாள். பாத்திரங்களை எப்படித் தேய்த்து வைத்திருக்கிறாள் பார்! வீட்டை பெருக்கி எவ்வளவு சுத்தமாக வைத்திருக்கிறாள்!'' என்றாள்.

அதுகேட்டு நாகப்பன் "இதை யெல்லாம் உன் மருகளா செய் தாள்!'' என்று கேட்கவே அவளும் "ஆமாம். தான் வேலை செய் வதை யாரும் பார்க்கக் கூடாது என்று சொல்லிக் கதவை மூடிக் கொண்டு எல்லாவற்றையும் செய்து விடுகிறாள்'' என்றாள்.

நாகப்பனும் "ஓ! கதவை மூடிக் கொண்டா செய்கிறாள்! யாரை யும் பார்க்க அனுமதிப்பதும் இல் லையா? எனக்கென்னவோ இந்த வேலைகளை எல்லாம் யாரோ வேலைக்காரர்கள் செய்வதுபோலத் தெரிகிறது. இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. நாம் கண்டுபிடிக்க லாம்'' என்றான். இருவரும் அப் போதே ஓரிடத்தில் மறைந்து கொண்டு பிரேமா என்ன செய்கி றாள் என்று பார்க்கலானார்கள்.

வீட்டின் எல்லாக் கதவுகளை யும் மூடிய பிரேமா கொல்லைப் புறக் கதவைத் திறந்தாள். உடனே சில வேலையாட்கள் உள்ளே வந் தார்கள். ஒருவன் வீடு பெருக்கிச் சுத்தம் செய்தான். மற்றொருவன் பாத்திரங்களைத் தேய்த்து வைத் தான். வேறொருவன் சமையல் செய்தான். பிரேமாவோ ஓரிடத்



தில் உட்கார்ந்து ஓவியம் வரைந்து கொண்டிருந்தாள்.

சீதாலட்சுமி உடனே சுந்தரத் தைக் கூப்பிட்டு "இதென்ன! இவள் இப்படிச் செய்வது உனக் குத் தெரியுமா?'' என்று கோபத் தோடு கேட்டாள். அப்போது பிரேமாவே "ஆமாம். நான் ஓவி யம் வரைகிறேன். என் கணவர் அவற்றை நல்ல விலைக்கு விற் றுப் பணம் கொண்டு வருகிறார். வசதியாக வாழ நான் சுயமாகச் சம்பாதிப்பதை, செலவு செய் கிறேன். என் பிறந்த வீட்டிலிருநது ஒரு காசுகூட வருவதில்லை. மேலும் இந்த வயதில் நாங்கள் வசதியாக வாழாமல் வேறு எப்போது வாழப்

போகிறோம்?" என்றாள்.

சுந்தரமும் "ஆமாம். நான் ஆறு மாதத்தில் சம்பாதிப்பதை இவள் ஒரு ஓவியம் வரைந்து சம்பாதித்து விடுகிறாள்" என்றான். அதுகேட்டு சீதாலட்சுமி "ஆகா! என் மருமகள் ஒன்றும் வீண்பொழுது போக்க வில்லை. தான் கற்ற கலையை நன்கு பயன்படுத்திக் குடும்பம் நடத்துகிறாள். கைநிறைய சம்பா திப்பதை இந்த வயதில் அனுபவி யாமல் வேறு எப்போது அனுப விக்கப் போகிறார்கள். என் மரு மகள் எல்லாவித் திலும் கெட்டிக்காரி தான்" என் றாள் முழுமனதுடன் பாராட்டியவாறே.

நாகப்பனோ "இதென்ன குடும் பம்! கணவன் சம்பாதிக்கத் தெரி யாதவன் என்று குத்திக் காட்டு வது போல இருக்கிறது உன் மரு மகள் செய்வது" என்று சீதாலட் சுமியைப் பார்த்துக் கூறினான்.

சீதாலட்சுமியோ "எனக்குக் கூட முதலில் பிரேமா மீது கோபம் வரத்தான் வந்தது. ஆனால் நிதான மாக யோசித்துப் பார்த்து அவள் செய்வது முற்றிலும் சரியே என்று தான் பட்டது. குடும்பப் பொறுப் பைக் கணவனும் மனைவியும் சேர்ந்து ஏற்பது எவ்வளவு சிறந் தது! நானோ என் மருமகள் இப்படி ஒரு கலையில் தேர்ச்சி பெற்றிருக்கிறாளே என்று இது வரை அறிந்திருக்கவில்லை. இனி நான் இவள் ஓவியம் வரைய ஊக்கம் அளித்து உற்சாகம் மூட் டவே போகிறேன்" என்றாள்.

அப்போது சுந்தரமும் பிரேமா வும் சீதாலட்சுமியை வணங்கி "நாங்கள் இதை உங்களிடம் முன்பே சொல்லாததற்கு எங்களை மன்னித்து விடுங்கள்" என்றனர். சீதாலட்சுமியும் அவர்களைத் தழு விக் கொண்டு "நீங்கள் ஒரு தவறும் செய்யவில்லை. நல்லதே செய்தீர்கள்" என்றாள்.

இதையெல்லாம் கண்டு நாகப் பன் வாயடைத்துப் போய் நின்றான்!









## செய்திகள்

## சாய்ந்து கொண்டிருக்கும் கோபுரம்

உலக அதிசயங்களில் ஒன்று என்று புகழ்பெற்ற இத்தாலி நாட்டுப் பிசா கோபுரத்தைக் காண ஆயிரக்கணக்கில் மக்கள் தினமும் வருகிறார்கள். மக்கள் பார்க்கவே இக்கோபுரத்தைச் சாய்வாகக் கட்டி வைத்தார்கள் என்று இதுவரை எல்லோரும் கருதி இருந்தனர். அண்மையில் ஆராய்ந்தபோது அந்த கோபுரம் கட்டப்பட்ட இடம் பெரும் பள்ளமாக இருந்தது என்றும் அது தூர்க்கப்பட்டபின் நேராகத்தான் கோபுரத்தை கட்டினார்கள் என்றும் தூர்க்கப்பட்ட மண் சரிந்து கொண்டே போவதால் அந்த கோபுரம் சாய்ந்து விட்டது எனவும் தெரியவந்துள்ளது. இப்போதும் அக்கோபுரம் ஆண்டிற்கு ஒரு செ. மீ. வீதம் சாய்கிறது.

## ஐந்து வயது சிறுமியின் பூகோள அறிவு

முதலாவது வகுப்பில் படிக்கும் சென்னையைச் சேர்ந்த ஸ்ரீவித்யா என்ற சிறுமிக்கு ஐந்து வயது. அவளது பூகோள அறிவு பாராட்டத்தக்கது. அவள் அட்லஸில் உலகின் எந்த முக்கிய நகரத்தையும் நொடிப்பொழுதில் சுட்டிக் காட்டி விடுகிறாள். எந்த நாட்டிற்கு எது தலை நகரம் என்பதைக் கேட்ட உடனே சொல்கிறாள். அவள் இரண்டு வயதுக் குழந்தையாக இருக்கும்போதே தன் மாமாவின் மடியில் உட்கார்ந்து அவர் பார்க்கும் அட்லஸை அவளும் கண்டு ஞாபகத்தில் வைத்து வந்தாளாம். அண்மையில் அவளைத் தன் இளம் உறுப்பினராக 'அமெரிக்க தேசிய பூகோளக் கழகம்' சேர்த்துக் கொண்டிருக்கிறது.

## மறக்க முடியாத நற்செயல்

இங்கிலாந்தின் பிரபல கால்பந்து ஆட்டக்காரர் பால் எட்மண்ட்ஸ் நல்ல கோல்கீப்பர். ஆகஸ்ட் 11ந் தேதி அவர் ஒரு பந்தய ஆட்டம் ஆடிவிட்டு வீடு திரும்பி வந்து கொண்டிருந்த போது கெல்லி என்ற இரண்டு வயதுக் குழந்தை 12 மீட்டர் (40 அடி) உயரக் கட்டடத்தின் மேலுள்ள சன்னலில் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். உடனே மின்னல் வேகத்தில் ஏறிப் போய் அவர் அக்குழந்தையை கீழே விழாமல் காப்பாற்றினார். அக்குழந்தையின் தாயான காரஸ்கிராண்ட் 'இந்த இருபத்தெட்டு வயது இளைஞர் பால் எங்களுக்கு மாபெரும் வீரர்' எனக்கூறி தன் நன்றியைத் தெரிவித்தார்.



# கழுதை ஜோசியம்!

மாங்காட்டில் மாதவய்யா என்ற ஜோசியர் இருந்தார். அவர் பஞ்சாங்கம் கணிப்பதிலும் சோதிடம் சொல்வதிலும் கை தேர்ந்தவர். அவர் கூறிய சோதிடப் பலன்கள் எல்லாம் பலித்தே வந்தன. அதனால் அவரது புகழ் எங்கும் பரவியது.

அவரது புகழ் அந்நாட்டு மன்னனுக்கும் எட்டவே அவன் அவரைப் பற்றி நன்கு விசாரித்து விட்டு அவரை அரசாங்க சோதிடராக நியமித்தான். இதனால் அவருக்குப் புகழோடு பணமும் நிறையக் கிடைக்கலாயிற்று. மாதவய்யா தனக்குக் கிடைத்த பணத்தில் தன் ஊரில் நிறைய வயல்களை வாங்கி போட்டார். தலைநகரில் வாழ்ந்து வரவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டும் அவர் அவ்வப்போது தன் கிராமத்திற்கு வந்து தன் வயல்களில் சரியாக வேலை நடக்கிறதா என்றும் பார்த்து வருவார்.

ஒரு முறை அவர் மார்கழி மாதம் தன் வயல்களைப் பார்க்க வந்தார். அப்போது அறுவடையாகி நெற்பயிற் களத்தில் குவிக்கப்பட்டிருந்தது. அதைப் பரப்பி நன்கு உலர வைக்க வேண்டும் என்று அவர் எண்ணிக் கொண்டு பாதை ஓரமாக நின்று கொண்டிருந்தார்.

அப்போது சப்பாணி என்ற சலவைத் தொழிலாளி தான் துவைத்த துணிகளைத் தன் கழுதை மீது போட்டுக் கொண்டு வந்து கொண்டிருந்தான். அவன் பாதை ஓரமாக நின்ற மாதவய்யாவைப் பார்த்து "ஐயா! இன்னும் இரண்டு மணி நேரத்தில் பெரிய புயல் காற்று வீசப் போகிறது. அதனால் உங்கள் நெல்லை பத்திரமான இடத்தில் கொண்டு போய் வைத்து

—சங்கரசுவாமி—

விடுங்கள்'' என்றான்.

மாதவய்யாவோ அவனைப் பார்த்துச் சிரித்து "அடேயப்பா! உனக்கு ஜோசியம் கூடப் பார்க்கத் தெரியுமா? எதைக் கொண்டு இப்படிச் சொல்கிறாய்? கிருகங்கள் நட்சத்திரங்கள் இருக்கும் நிலை கொண்டா? அதன்படிப் பார்த்தால் இப்போது மழையே வராதே! ஆகாயத்தைப் பார்! எங்காவது மேகம் இருக்கிறதா!'' என்றார்.

சப்பாணியோ "நீங்கள் சொல்கிற கிரகம் நட்சத்திரம் என்பது பற்றி எல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் இன்னமும் இரண்டு மணி நேரத்தில் புயல் வீசி மழை பெய்யும் என்பது மட்டும் எனக்கு நன்றாகத் தெரிந்து விட்டது. அதனால்தான் நான் உலர்ந்த துணிகளை எடுத்துக் கொண்டு என் வீட்டிற்குப் போய்க் கொண்டிருக்கிறேன். வழியில் உங்களைக் கண்டதால் எச்சரித்தேன்'' என்று கூறிவிட்டுத் தன் கழுதையை ஓட்டிக் கொண்டு போனான்.

சப்பாணி போன பிறகு மாதவய்யா மறுபடியும் ஒருதடவை ஆகாயத்தைப் பார்த்தார். எங்கோ வெகு தொலைவில் ஒரு மூலையில் ஒரு சிறிய மேகம் தென்பட்டது. அதைப் பார்த்த அவர் "அதுவா இங்கே வந்து மழையைக் கொட்டப் போகிறது'' என்று மனதிற்குள் எண்ணிச் சிரித்தார்.

ஆனால் கால்மணி நேரம் கழிந்ததும் அந்த சிறுமேகம் வேகமாக



நகர்ந்து வர அதன் பின்னால் கரு மேகங்கள் அடர்ந்து வந்தன. புயல் காற்று வீசி மழையும் பெய்தது! அதைக் கண்டு மாதவய்யா திடுக்கிட்டு ஆச்சரியமும் அடைந்தார். புயல் வரப்போகிறது என்பதை சப்பாணி எதைக் கொண்டு முன் கூட்டியே அறிந்து கொண்டான் என்றும் ஏன் தனக்குத் தெரியாமல் போயிற்று என்றும் எண்ணி அவர் மனம் புழுங்கினார்.

புயலும் மழையும் ஒய்ந்ததும் அவர் சப்பாணியின் வீட்டிற்குப் போய் "சப்பாணி! எனக்கே புயல் வரப்போவது பற்றித் தெரியாமல் இருந்தபோது அது உனக்கு மட்டும் எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார். சப்பாணியும் "இந்த மாதிரிப் புயல் அடிக்கப் போவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்னால் என் கழுதையின் உடல் ரோமங்கள் செங்குத்தாக நிற்கும். அது தன் வாலை உயர்த்தி பலமாகக் கத்தும். இன்று அப்படிச் செய்ததால் புயல் வரப் போவதைத் தெரிந்து கொண்டேன். ஆனால் உங்கள் ஜோதிட சாஸ்திரத்தால் இதை உங்களால் தெரிந்து கொள்ள முடியவில்லையே" என்று கூறிச் சிரித்தான்.

அப்போது மாதவய்யா "இப்போது நாம் பேசியதை யாரிடமும் சொல்லி விடாதே. சொன்னால் எனக்குத் தலை குனிவு" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டு போனார். சப்பாணியும் தான் யாரிடமும் சொல்வதில்லை என்றும் அவருக்கு வாக்களித்தான்.

ஆனால் அந்த விஷயம் எப்படியோ எல்லோருக்கும் தெரிந்து விட்டது. எல்லோரும் கிண்டலாக "மாதவய்யாவின் ஜோசியத்தை விடக் கழுதையின் ஜோசியமே மேல்" என்றுக் கூறிச் சிரிக்கலானார்கள். இதனால் மாதவய்யாவிடம் ஜோசியம் கேட்க வருபவர்களின் எண்ணிக்கை நாளடைவில் குறைந்தும் போயிற்று.



இயற்கை விநோதங்கள்



## முதலையின் நற்குணம்

முதலை வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டு நீரிலிருந்து கரைக்கு வந்து வெய்யிலில் படுத்து இளைப்பாறும். அப்போது அது எந்தப் பிராணிக்கும் தீங்கு இழைக்காது. அப்போது அதன் உடல் மீதுள்ள பூச்சி புழுக்களைப் பிடித்துத் தின்ன சிறு சிறு குருவிகள் பறந்து வந்து அதன் வாய்க்குள் கூடப்புகுந்து விடும். அப்போதும் முதலை அவற்றை ஒன்றும் செய்யாது. ஆனால் அது நீருக்குள் போய்விட்டால் நீரிலுள்ள ஜீவராசிகளைப் பிடித்து விழுங்குவதோடு நீர் குடிக்க வரும் பிராணி களையும் பிடித்து விழுங்கி விடும். முதலை தன் உணவை வாயில் அறைத்துச் சாப்பிடுவது இல்லை.



## பின்னால் போகும் பறவை

கௌதிமாலாவின் தேசீயப் பறவை க்வேட்ஜால். இவ்வகை ஆண் பறவைகள் மிக அழகானவை. இதன் உடலின் நீளம் 35 செமீ. ஆனால் இதன் வாலோ இதைப் போல இரு மடங்கானது. இது பறக்க ஆரம்பிக்கும் போது முதலில் சற்றுப் பின்னால் நகர்ந்து போய்ப் பிறகு முன்புறமா கப் பறக்கும். பெண் பறவை மரப்பொந்துகளில் முட்டைகளை இடும். ஆண் பறவை அம்முட்டைகளின் மீது அமர்ந்து அடைகாக்கும் இது உட்கார்ந்த நிலையில் நீண்ட வால் பார்க்க மிக அழகாக இருக்கும்.

## ஒளிவிடும் உயிரினங்கள்

ஒளிவிடும் பூச்சிகளில் மின்மினிப் பூச்சி முக்கியமானது. இது தன் இனத்தவரைத் தன்னருகே வரச் செய்ய ஒளிவிடுகிறது. 'லாந்தல் கண்' மீன்களில் கண்களில் ஒளி கண் மடிப்பிலுள்ள சிறு கிருமிகளால் ஏற்படுகிறது. பிரேஜில் நாட்டைச் சேர்ந்த சில ஆதிவாசிகள் ஒருவித நாய்க் குடைகளை வெளிச்சம் தர உபயோகிக்கிறார்கள். இக்குடை களின் அடிப்பகுதியில் ஒளியைத் தரும் திரவம் சுரக்கிறது.



*" Now be a good boy, Floppy*
*And come for your bath".*



Your child and Floppy

You just can't keep them apart.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்**


V. Muthuraman


Subhash G. Shenoy

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **உழவு சிறக்க உரம் தேவை**

இரண்டாவது போட்டோ: **உழைப்பு சிறக்க கரம் தேவை**

பரிசு பெற்றவர்: **இ. குணசேகரன், கல்குளம்**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---